# அரும்பு

## - உருவகக் கதைகள் -

வி. ஸ. காண்டேகர்

மராட்டியிலிருந்து மொழிபெயர்ப்பு:

கா. ஸ்ரீ. ஸ்ரீ.



கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை

 [விலை ரூ. 1/4

முதற் பதிப்பு : 1945





'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**

Printed at the Madras Law Journal Press, Mylapore, Madras
MS. 76—15th October 1945—1500c.

## விளக்கம்

ராபின்ஸன் க்ரூஸோவைப் போல நீங்களும் மனிதப் பூண்டே அற்றுப்போன ஒரு தீவில் பல ஆண்டுகள் வாழ நேர்ந்து, உங்கள் கையில் பத்துப் புத்தகங்களை எடுத்துக்கொண்டு போக முடியும் என்றால், நீங்கள் எந்த எந்த நூல்களை எடுத்துச் செல்வீர்கள் ?

புகழ்பெற்ற ஓர் எழுத்தாளர் இந்தக் கேள்வியைக் கேட்டிருந்தார். அவர் கட்டுரையைப் படித்தபோது, 'இது என்ன பிரமாதம்! பத்து எண்ணுவதற்குள்ளே எனக்கு விருப்பமான பத்துப் புத்தகங்களின் பெயரைச் சொல்வேனே!' என்றுதான் நினைத்தேன். ஆனால் அவற்றை வரிசையாக எழுத உட்கார்ந்தபோதுதான் அது எவ்வளவு சிரமமான வேலை என்பது தெரிந்தது.

நமக்குத் தெரிந்த நண்பர்கள் பலர் இருக்கின்றனர். வம்பளப்பதிலும் தேநீர் அருந்துவதிலும் சினிமாப் பார்ப்பதிலும் நம்முடைய மகிழ்ச்சியை இருமடங்காக்க அவர்கள் யாவரும் பயன்படுகின்றனர். இடுக்கண் உற்றபொழுது நம் துன்பத்தை அறிந்து அதைப் பங்கிட்டுக்கொள்ள ஓடிவரும் நண்பன் அவர்களுள் அருமையாகத்தான் இருப்பான். எவனாவது ஒருவன் ஒருகால் அப்படி இருக்கலாம். நாம் படிக்கும் நூல்களும் அதைப் போன்றனவே.

நாம், வாழ்க்கையில் பல காரணங்களால் பல புத்தகங்களைப் படிக்கிறோம். அவற்றில் நமக்குப் பிடித்த பத்துப் புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பது, பாலைவனத்தில் சிதறிக் கிடக்கும் பத்துப் பொன்மணிகளை ஆராய்ந்தெடுப்பது போன்றதுதான்! அதிலும், உறுதியாக, பத்துப் புத்தகங்களையே எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லும்பொழுது, மனத்தில் ஏற்படும் கலவரத்தைக் கேட்கவே வேண்டாம்!

சிறு பருவத்திலிருந்து எனக்கு நாடகங்கள் பிடிக்கும். அந்தத் தீவுக்கு எடுத்துச் செல்ல நான் எத்தனையோ நாடகங்களை அடிக்கடி எடுத்தேன். முடிவில் இப்ஸனைத் தவிர வேறு யாரும் அந்தத் தனிமையில் எனக்குக் கூட்டாளியாக இருக்க முடியாது என்பதை நான் ஒப்புக்கொள்ளவே வேண்டியிருந்தது.

இந்தப் பத்துப் புத்தகங்களில் எந்த நாவலைச் சேர்ப்பது? இந்தப் புதிர் விடுபடவே இல்லை. ஆப்டே, சரத்சந்திரர், ஹார்டி, டர்ஜனீவ், ஸ்டீபன் ஜ்வைக் - எல்லாருமே எனக்குப் பிடித்த நாவலாசிரியர்கள்!

இனி, எந்தக் கவிதைத் தொகுதியை எடுத்துக்கொள்வது? இந்தக் கேள்விக்கு விடையைச் சிந்தித்துச் சிந்தித்து என் தலை நரைத்துப் போயிற்று! இலக்கியத்தின் ஒவ்வொரு பகுதியிலும் நமக்குப் பிடித்த ஒவ்வொரு நூலைத் தேர்ந்தெடுப்பதை விட ஒரு ராஜ கன்னிகைக்குச் சுயம்வரம் நடத்திவிடலாம்!

இந்தப் பத்துப் புத்தகங்களின் வரிசையில் இரண்டு நூல்களை முடிவாகக் குறிப்பிட்டபோது மட்டும் என் மனத்தில் சிறிதும் கலவரம் ஏற்படவில்லை: ராமாயணமும் ஈஸாப் நீதிக் கதைகளும். என்னைப் பொறுத்த வரையில் ராமாயணம் வெறும் மகாகாவியம் அல்ல. அது வாழ்க்கைக்கு வழி காட்டும் தத்துவ நூல். 'இடுக்கண் வருங்கால் நகை'க்கக் கற்றுக்கொள்ள விரும்புகிறவன், ராமாயணம் இல்லாமல் ஒன்றும் செய்ய முடியாது.

நான் ராமாயணத்தைத் தேர்ந்தெடுத்தது இக்காலத்தில் பலருக்குப் பிடிக்காமல் இருக்கலாம். ஆனால் அதற்காக யாரும் எனக்கு அதிகமாக அசட்டுப் பட்டம் கட்ட மாட்டார்கள். உயிர் நண்பர்களைப் போன்ற என் பத்துப் புத்தகங்களில் ஈஸாப் நீதிக் கதைகளைச் சேர்த்திருப்பதைக் கண்டு அவர்களுக்கு அடிவயிற்றிலிருந்து சிரிப்பு வந்து முட்டும்! கால்பந்து விளையாடுகிறவன் கோலி விளையாடக் கிளம்புவது போல அவர்களுக்குத் தோற்றும்! சிலர் பரிகாசமாக 'ஓ! எட்டு ஒன்பது வயசுப் பையனுக்கு இருக்கும் அறிவுக்கு மேல் இந்த ஆசாமிக்கு அறிவு வளரவில்லை போல் இருக்

கிறது!' என்று மனத்துக்குள் சொல்லிக் கொள்ளவும் கூடும்.

யார் என்ன சொன்னாலும் சரி, உலகத்திலேயே திறமை மிகுந்த முதல் உருவகக் கதாசிரியனான ஈஸாப்பின் அறிவாற்றலில் இன்று இந்த நாற்பத்தேழாவது வயதிலும் எனக்கு மிகுந்த மதிப்புத் தோன்றுகிறது. ஒளிப் பிழம்பான தாரகை பூமியிலிருந்து எவ்வளவு தொலைவில் இருந்தபோதிலும், அதன் வெளிச்சம் நமக்கு எட்டியே தீருகிறது. அது போலவே, இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகள் கடந்த பின்பும், அறிவாற்றலில் மிகுந்த அவன் கதைகள் இன்றை உலகத்து நாகரிக மாந்தரையும் மயக்கவல்ல அழகு வாய்ந்தனவாக இருக்கின்றன. ஈஸாப்பினிடம் கவியின் கற்பனைத் திறனும், விநோதமாக எழுதும் புலவனின் ஆராய்ச்சியும், உலகத்தில் வாழும் தத்துவஞானியின் அறிவும் இருந்தன. வெளிப்படையாகக் கூறும் கசப்பான உண்மை, உலகத்தினருக்கு எடுத்த எடுப்பில் பிடிப்பதில்லை; பெரும்பாலும் அதற்குப் பயன் ஏற்படுவதும் இல்லை என்பதை அறிந்தே, அவன் உருவகக் கதை என்னும் இலக்கிய உருவத்தை எடுத்துக்கொண்டு, கணந்தோறும் புதிது புதிதாக மலரும் தன் கற்பனைத் திறத்தினால் அதை விதவிதமாக அலங்கரித்து உலகத்துக்குத் தந்தான்.

உருவகக் கதையில் முக்கியமும் பயன் தருவதுமான குணம்: அற்புதமான கற்பனை வன்மை. கற்பனைத் திறத்தோடும் நுட்பத்தோடுங்கூட, அந்தக் கதைக்கு நிறம் தீட்டும் மற்றொரு குணம்: சிந்தனையைத் தூண்டும் தன்மை. ஒவ்வொரு கதையின் முடிவிலும் ஈஸாப் தன் கதையின் கருத்தைக் கூறியது இந்தத் தன்மைக்குப் பெரிதும் தீமை விளைப்பது. இன்று சாமானியமான உருவகக் கதாசிரியன்கூடக் கனவிலும் இந்த வழியைக் கைக்கொள்ள மாட்டான். ஆயினும் நீதிவாக்கியத்தைக் கவனிக்காமல் ஈஸாப்பின் கதைகளைப் படித்தால், அவனிடம் பிறர் கற்பனையைத் தூண்டும் வல்லமை இருப்பது எளிதில் புலப்படும். 'மனிதனும் சிங்கமும்' என்ற மிகவும் சாதாரணமான கதையையே எடுத்துக் கொள்ளுங்கள். இது இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டு

களுக்கு முந்திய வெறும் சமத்காரக் கற்பனை அல்ல. இன்று நம்மைச் சுற்றியுள்ள தன்னல உலகத்தின் நிழலும் அதில் தெளிவாகப் பதிந்திருக்கிறது. இந்தக் கதையில், 'மனிதன் சிங்கத்தைவிட உயர்ந்தவன்' என்று நிரூபிப்பதற்காகச் சிங்கத்தின் மேல் ஏறிச் சவாரி செய்யும் மனிதனின் படத்தை ஒரு மனிதன் சிங்கத்துக்குக் காட்டுகிறான். "இந்த ஓவியத்தை வரைந்தவன் மனிதன். சிங்கம் இதை வரைந்திருந்தால், மனிதனுடைய மார்பின் மீது உட்கார்ந்து அவன் உடலைக் கிழிக்கும் காட்சியை அது காண்பித்திருக்கும்!" என்று சிங்கம் உடனே பதில் சொல்கிறது.

கிறிஸ்து பிறப்பதற்கு முன்னால் ஈஸாப் நீதிக் கதைகளில் வரும் இந்தச் சிங்கத்தின் பேச்சை இன்றும் நாம் கேட்கிறோம். சீர்திருத்தம் உச்சாணிக்கிளையில் ஏறியிருக்கும் இந்த இருபதாம் நூற்றாண்டில் வாழும் ஒவ்வொரு வகையான அடிமைகளின் உள்ளத்திலும் குமுறிக்கொண்டிருக்கும் துன்ப ஒலியின் எதிரொலியே இது. சாம்ராஜ்யங்களின் நிழலில் வதங்கிச் சுதந்தரம் பேசும் நாடுகளும், மேல் வகுப்பினருக்கு அடிமையாகி அமுங்கிய துரதிருஷ்டம் பிடித்த தாழ்ந்த வகுப்புக்களும், முதலாளித்துவம் என்னும் போராட்டத்தில் சிக்கிச் சக்கையான எளிய ஏழை மக்களும் உள்ளுக்குள்ளே குமுறிக்கொண்டு எப்போதும் பேசும் ஒரே பேச்சு இதுதான்: "மனிதன் தீட்டிய ஓவியத்தில், சிங்கத்தின் பிடரியைப் பற்றிக்கொண்டு அதன் முதுகில் விளையாட்டாக உட்காரும் மனிதனை அவன் காட்டியிருக்கிறான். ஆனால் அந்தப் படத்தை வரையும் பொறுப்பைச் சிங்கத்தினிடம் ஒப்பிக்கும் நாள் ஒன்று வரும். அன்றைக்கு, மனிதனின் மார்பில் உட்கார்ந்து அவன் உடலைக் கிழிக்கும் சிங்கத்தின் படம் உலகுக்குத் தென்படும்."

கற்பனைத் திறன், நுட்பம், சிந்தனையைத் தூண்டும் வல்லமை ஆகிய முக்கியத் தன்மைகள் ஈஸாப்பின் கதைகளில் உள்ளன. இந்தத் தன்மைகளின் சேர்க்கையால் பிறக்கும் இலக்கிய சிருஷ்டி அழகாக இருப்பது இயல்பே. ஆனால் அழகுக்கும் சாவாமைக்கும் நெடுவாசி உண்டு. பரந்த கற்பனை வளமும், எல்லாப் பொருள்களிலும் ஊடுருவும்

பேராற்றலும் இல்லாமல் எந்தக் கலைஞனும் சாகாத இலக்கியத்தைச் சிருஷ்டிக்க முடியாது.

பரப்பு என்ற இந்தத் தன்மையும் ஈஸாப்பின் சின்னஞ் சிறு கதைகளில் தென்படுகிறது. பனித்துளியில் வானம் தென்படுவது போல அவனுடைய சின்னஞ்சிறு உருவகக் கதைகளில் மனித வாழ்க்கையின் பற்பல உருவங்களின் நிழல்கள் தெளிவாகப் பதிந்துள்ளன. 'இரண்டு பெண்டாட்டிக்காரன் கதை'யில் இளம் மனைவி கணவனின் நரைத்த மயிரையும், வயசான மற்றொருத்தி அவனுடைய கருங் கூந் தலையும் நீக்கிவிட, அவன் தலை மொட்டையாகப் போனது வெறும் வேடிக்கைக் கதை அல்ல! ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட நோக்கங்களுக்கு இலக்காகி, இரண்டுங்கெட்டானாக இருக்கும் மனத்தையும் அந்தக் கதை சித்திரிக்கிறது.

இக்காலத்தில் கதைப் போக்குகள் ஆச்சரியகரமாக மாறியிருந்த போதிலும் – கதையுலகில் கற்பனைத்திறன் மிகுந்த பல கலைஞர்களின் விதவிதமான எழில் தென்பட்ட போதிலும் - பெரிய பெரிய எழுத்தாளர்களும் தம் மனத்திலுள்ள கருத்துக்களை உருவகக் கதைகளின் மூலமாகவே வெளிப்படுத்துவதைக் காண்கிறோம். உலக இலக்கியத்தில் நீளத்தில் மிகச் சிறியதும் மனத்தில் பதியும் தன்மையில் மிகச் சிறந்ததுமான கதையை எழுதியவன் தற்காலத்து ரஷ்ய எழுத்தாளனான ஸோலோகப் என்பவன். அது ஓர் உருவகக் கதை. 'சமத்துவம்' என்பது கதையின் பெயர்.

கதை இவ்வளவுதான் :

ஒரு பெரிய மீன் சிறிய மீனைக் கண்டதும் அதை விழுங்க வாயைத் திறந்தது.

"இது பெரிய அநீதியாக இருக்கிறதே! எனக்கும் வாழும் உரிமை உண்டு. சட்டப்படி எல்லா மீன்களும் சமமானவை" என்று சிறுமீன் கத்தியது.

பெரிய மீன் அமைதியாக, "சட்டத்தைப் பற்றி ஏன் சும்மா அளக்கிறாய்? நான் உன்னை விழுங்கக் கூடாது என்பதுதானே உன் எண்ணம்? சரி, இதோ என்னையே நீ விழுங்கிவிடேன்! விழுங்கு அப்பனே, விழுங்கு. ஏதுக்கு இப்

படிப் பயப்படுகிருய்? நான் உன்மேல் ஒரேயடியாகப் பாய்ந்துவிட மாட்டேன்" என்று பதில் சொல்லியது.

சிறு மீன் துணிவு கொண்டு வாயைத் திறந்து அந்தப் பெரிய மீனை விழுங்க ஆனமட்டும் முயன்றது. கடைசியில் பெருமூச்சு விட்டு நம்பிக்கையை இழந்து, "நீ சொல்வது தான் ஐயா, உண்மை. என்னை விழுங்கிவிடு" என்றது.

இந்தக் கதையைப் படிக்க இரண்டு நிமிஷங்கூடப் பிடிப்பதில்லை. ஆனுல் படித்த பிறகு இரண்டு வருஷமானுலும் மறப்பதில்லை. கற்பனையை எழுப்பும் அழகிய பாட்டின் இன்னிசை, காதில் ஒலித்துக்கொண்டே இருப்பதுபோல, இந்தச் சின்னஞ்சிறு கதை குறிப்பாகத் தெரிவித்த பரந்த உண்மையும் நம் மனத்தில் விடாமல் சுழலுகிறது. உலகில் வலியோர் எளியோரை வாட்டுவதும், பணக்காரர்கள் ஏழைகளை வருத்துவதுமான அநீதிகளை இந்தக் கதை எவ்வளவு நன்ருக விளக்கிக் காட்டுகிறது!

உருவகக் கதைகளின் புத்தம் புதிய அழகு வடிவங்களைப் பார்க்கவேண்டுமானுல் கலில் கிப்ரான் எழுதிய கதைகளைப் படிக்கவேண்டும். அந்தத் தனிமையான தீவுக்கு எடுத்துச் செல்லும் புத்தகங்களில் ஈஸாப் நீதிக் கதைகள் இருக்கத் தான் வேண்டும் என்று எனக்குத் தோன்றினும், ஈஸாப் வேண்டுமா அல்லது கிப்ரான் வேண்டுமா என்ற கேள்வி எழுந்தால், நான் கிப்ரானையே தேர்ந்தெடுப்பேன். பெரும்பாலும் அவனுடைய உருவகக் கதைகளில் கற்பனைத் திறன், சிந்தனையைத் தூண்டும் தன்மை, நுட்பம், பரப்பு ஆகிய இவற்றுள் இரண்டு மூன்று குணங்களாவது அழகாக இழையாத கதையே இல்லை. எந்தக் கதையும் ஒன்று அல்லது ஒன்றரைப் பக்கத்துக்கு மேல் போவதில்லை. அதைப் படித்தவுடனே நாம் இதுவரையில் காணுத ஒரு புதிய உலகத்துக்கு வந்தாற்போலத் தோன்றுகிறது. உதாரணமாக, 'தூக்கத்தில் நடப்பவர்கள்' என்ற கதையைப் பாருங்கள்.

ஒரு தாயும் பெண்ணும் நடுநிசியில் தூக்கத்தில் நடந்துகொண்டே வீட்டுக்கு வெளியிலுள்ள சோலைக்கு வருகிருர்கள். அந்த மயக்கத்திலேயே, அவர்கள் சந்திக்கிருர்கள். பெண்ணைக் கண்டதுமே தாய் எரிச்சலோடு, "போடீ, எங்

காவது ஓடிப்போய் உன் முகத்தில் கரியைத் தீற்றிக் கொண்டு வா! என் அழகையும் இளமையையும் அழிக்கும் ராக்ஷஸி நீ!'' என்கிறாள். பெண்ணும் ஆத்திரத்தோடு, "நீ மட்டும் என்னவாம்? நீயும் எனக்கு எதிரிதான். உன் தீய தன்மைகள் யாவும் என்னிடம் ஒட்டிக்கொண்டிருக்கின்றன; என் ரத்தத்தில் கலந்திருக்கின்றன. ஓடிப் போடீ! எங்காவது போய் முகத்தில் கரியைத் தீற்றிக்கொண்டு வா! வந்துவிட்டாள் இங்கே ராக்ஷஸி!'' என்கிறாள்.

இதற்குள் கோழி கூவுகிறது. இருவரும் கண் விழிக்கின்றனர். பெண், "அம்மா, அம்மா!'' என்று தாயை அன்போடு தழுவிக்கொள்கிறாள். தாயும், "அடி என் கண்ணே!'' என்று பரிவுடன் பெண்ணை அணைக்கிறாள்.

இருபது பக்கங்கள் கொண்ட சிறந்த சமூகக் கதையில் கூட, ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட மனப்பான்மைகளை இவ்வளவு தீவிரமாகச் சித்திரித்திருப்பது அருமை.

மனத்தில் தோன்றிய ஒரு கருத்து உயர்ந்ததாகவும் கவர்ச்சிகரமாகவும் இருந்தாலும், அதை அழகிய உருவகக் கதையாக மாற்றுவது, மேலாகப் பார்க்கும்போது தென்படுவது போல அத்தனை எளிதல்ல. யானைத் தந்தத்தைக் குடைந்து சிறிய தாஜ்மகல் ஆக்குவதற்கு மட்டான திறமையா வேண்டும்? உருவகக் கதை உருவில் சிறிதாயினும், இந்த இலக்கிய வகையில் முழுத் திறமையையும் காட்டி அதைச் சிறப்பாக்குவது சிரமம். கதையுலகில் நீண்ட கதையையும் சிறு கதையையும் போலவே இந்தக் கதை வகையும் அழகும் திறமையும் கொண்டு விளங்குகிறது.

மனித வாழ்க்கையிலும் மனிதனுடைய மனத்திலும் தோன்றும் விசித்திரமான சிக்கல்களைச் சித்திரிக்கும் ஓர் எழுத்தாளனுக்கு உருவகக் கதை ஒப்பற்ற கருவியாகும். உதாரணமாக, யந்திர வாழ்க்கையில் மனிதனுக்கு ஏற்படும் வெறுப்பையும், தனக்குப் பிரியமானவர்களோடு கலந்து வாழ அவன் எவ்வளவு ஏங்குகிறான் என்பதையும் குறிப்பிடும் இந்தச் சின்னஞ்சிறு உருவகக் கதையைப் பாருங்கள்:

அரண்மனை முழுவதும் ஓட்டமும் நடையுமாக இருந்தது. குழந்தை யுவராஜா அழுதுகொண்டிருந்தார்.

செவிலித்தாய் பொன் கிலுகிலுப்பையை அடிக்கடி குலுக்கினாள்.

பணிவிடைக்காரன் தொட்டிலின் மேல் தொங்கிய அழகிய குருவிகளை விர்ரென்று பறக்கவிட்டான்.

ஆனால் யுவராஜனின் அழுகை நிற்கவில்லை.

"சிறு குழந்தைகளுக்குப் பாட்டுப் பிடிக்கும்" என்று யாரோ சொன்னார்கள்.

உடனே கிராமபோன் பாட ஆரம்பித்தது. கீர்த்தனை, கும்மி, பஜனை - ஒன்று பாக்கியில்லை!

ஆனால் யுவராஜனின் அழுகை நிற்கவில்லை.

'யுவராஜா பெரியவரானதும் சீமைக்குப் படிக்கப் போவார்! எனவே அவருக்கு இந்தியச் சங்கீதம் பிடிக்காமல் இருப்பது இயல்புதான்' என்று ஒருவருக்குச் சந்தேகம் வந்தது. அவர் ஓடிப்போய் ரேடியோவைத் திருப்பினார். ஆங்கிலப் பாட்டின் இசைகள் தொட்டிலைச் சூழ்ந்து கொண்டன.

யுவராஜா பின்னும் அதிகமாகக் கத்தினார்.

எல்லாரும் சிந்தையில் ஆழ்ந்தனர். என்ன செய்வதென்று யாருக்கும் தோன்றவில்லை.

பக்கத்து அரண்மனையில் மகாராணி தூங்கிக்கொண்டிருந்தாள். குழந்தை அழும் ஒலியைக் கேட்டு அவள் திடுக்கிட்டு எழுந்து ஓடிவந்து தொட்டிலிலிருந்து குழந்தையை வாரி எடுத்து முத்தமிட்டு அணைத்துக்கொண்டு ஒரு பாட்டுப் பாடினாள்.

அதற்கு ராகமா, தாளமா, அர்த்தமா - ஏதும் இல்லை. அப்படிப்பட்ட ஒரு பாட்டு அது! கிராமபோனும் ரேடியோவும் பாடும்போது அந்தக் கன்னுபின்னு என்ற பாட்டைக் கேட்க யாருக்கும் பிடிக்கவில்லை.

யுவராஜன் மட்டும் நகைத்துக்கொண்டு தாயின் கழுத்தில் இருந்த தாலியோடு விளையாடலானான்.

உருவகக் கதை உருவில் சிறிதாகவும், முடிவு அழகாக அமைவதனால் மனத்தில் நீண்ட நாள் பதிவதாகவும் இருக்கும். 'சின்னஞ்சிறு கதை' என்று சொல்லப்படும் இலக்கிய உருவத்துக்கும் இதற்கும் இயல்பில் வேற்றுமை உண்டு.

சின்னஞ்சிறு கதையில் மிகவும் முக்கியமான அம்சம் அதன் ஆச்சரியகரமான முடிவு. அநேகமாக அந்தச் சமத்காரம் வெறும் அறிவுப் பயிற்சியோடு சரி! ஆனால் வெறும் அறிவுப் பயிற்சியினாலோ கற்பனைக் குவியலினாலோ உருவகக் கதையை நிறம்பெறச் செய்ய முடியாது. வேடிக்கைக் கதைகளைப்போலவே சின்னஞ்சிறு கதையும் பொழுதுபோக்குக்கு ஏற்றதாக இருந்துவிட்டால் போதும். உருவகக் கதையிலோ பொழுதுபோக்கு மட்டும் அன்றி, சிந்தனையையும் உணர்ச்சியையும் தூண்டும் தன்மை கட்டாயம் இருக்கவேண்டும். இழையும்படியான குறைந்த சொற்களைக் கொண்டு சூழ் நிலையை உண்டாக்கி, தேர்ந்தெடுத்த அதிசயமான கற்பனைகளினால் அழகைத் தெளிவுபடுத்தி, இவற்றோடு கூடவே சிந்தனையையும் உணர்ச்சியையும் கலந்து, உண்மையான வாழ்க்கையையும் வாழ்க்கை மதிப்புக்களையும் வாசகர்களுக்குத் தீவிரமாக உணர்த்தவல்ல இந்த உருவகக் கதை என்னும் இலக்கிய உருவம், காவியத்துக்குச் சமமானது.

வி. ஸ. காண்டேகர்

# உள்ளுறை

# அரும்பு

## இறைவன்

வெளியே இருள் சூழ்ந்திருந்தது. வெட்டுக்கிளிக்கு அந்த இடம் பிடிக்கவில்லை. ஜன்னல் வழியாக அது அறைக்குள்ளே வந்தது. அந்தி வேளையில் கதிரவனின் ஒளியிலே ஒளிரும் கடல் நீர்போல, விளக்கின் வெளிச்சம் அதன்மீது பட்டவுடனே அதன் பசுமை நிறம் பளபளத்தது.

வெட்டுக்கிளி மிக்க இறுமாப்புடன் தன் நிறத்தைக் கண்டு களித்தது. 'உர்ர், உர்ர்' என்னும் சப்தத்தைக் கேட்டு அது திடுக்கிட்டுப் பார்த்தது. விளக்கின் கீழே ஒரு பூனை உட்கார்ந்திருந்தது. அது தான் எவ்வளவு கறுப்பு! 'விளக்கு நிழலில் இருட்டு இருக்கும்' என்னும் வசனம் பொய்யல்ல.

வெட்டுக்கிளியின் உள்ளத்தில் கர்வ அலைகள் மோதின. 'என் நிறம் எவ்வளவு பச்சைப் பசேலென்று இருக்கிறது, பச்சை மணிபோலே! விளக்கின் கீழே இருக்கும் அந்தக் கரிக்கட்டையைப் பார்! சீ!' என்று அது ஆனந்தக் கூத்தாடியது.

பறவைகள் மரக்கிளைகளில் தாவி விளையாடுகின்றனவே: அவை ஒரு கிளையின் நுனியில் ஊசலாடிக்கொண்டிருக்கும்; மறுகணம் அடுத்த கிளைக்கு

மாறும். வெட்டுக்கிளியும் அவ்வாறே செய்யத் தொடங்கியது. இந்தக் கணத்திலே அது கூரைக்கு மேலே பறந்து செல்லும்; அடுத்த கணத்தில் விர்ரென்று கீழே இறங்கி வரும்.

இறங்கியவாறே, 'என் உடல் எப்படி ஆகாய விமானம் போலே அமைந்திருக்கிறது! விளக்கின் கீழே குந்தியிருக்கும் அந்தக் கறுப்பன் எப்படி இருக்கிறன் பார்; எருமை மாட்டைக் காட்டிலும் மோசம்!' என்றெல்லாம் அது நினைக்கும்.

விளக்கின் நிழலில் பூனை வருத்தத்தோடு உட்கார்ந்திருந்தது. நான்கு நாட்களாக அதற்கு - எலி அகப்படாவிட்டால் போகிறது - ஒரு பல்லி, அதுவும் இல்லையென்றால், ஒரு புழுவாவது கிடைக்கக்கூடாதா? பாவம்! அதற்கு அதுகூடக் கிடைக்கவில்லை. 'உர், உர்' என்று உறுமிக்கொண்டே, "இறைவன் கருணையே இல்லாதவன். இன்று நான்கு நாட்கள் ஆயின, நான் சாப்பிட்டு" என்றது அது.

அதன் வார்த்தையைக் கேட்டு வெட்டுக்கிளி வியப்புற்று, 'இறைவனு கருணையற்றவன்? எனக்கு இவ்வளவு அழகிய பசுமைநிறமும், ஆகாய விமானத்தைப்போல் பறக்கும் உடலும் தந்திருக்கிறனே; அப்படிப்பட்ட ஆண்டவனு கருணை இல்லாதவன்?' என்று நினைத்தது.

அது விளக்கின் அருகில் தாவிச் சென்று, "பூனையாரே, தங்களைப்போன்ற முழு முட்டாளும் உலகில் உண்டோ? கடவுள் மிகக் கருணை கொண்டவர். பாரும் ஐயா, கடவுள் எனக்குக் கொடுத்திருக்கும் நிறத்தை! இதோ பாரும், என் ஆகாய விமானம் பறக்கிறது..." என்றது.

ஆனால், அந்த ஆகாயவிமானம் மேலே பறப்பதற்கு முன்னமே தரையில் குப்புற விழுந்தது. பூனை குறி தவறாமல் அதைப் பிடித்தது.

"இறைவன் கருணையற்றவன்! து...ஷ்...ட...ன்!" என்று வெட்டுக்கிளி கூவியது.

பூனையோ நாவினால் தன் இரையைச் சுவைத்துக் கொண்டே, "இறைவன் கருணாகரன்; அவனுடைய கருணை மிக மிகப் பெரிது" என்றது.

# அழகிய ஓவியம்

விசேஷ மலரில் வெளியிட ஒரு சித்திரம் தேவை என்று கேட்டிருந்தார்கள். அது மட்டுமா! மிகவும் உயர்ந்த மாதப்பத்திரிகையின் கோரிக்கை அது. இதைவிடப் பிரம்மானந்தம் வேறு வேண்டுமா? குடியானவனின் அழகிய பெண், தன் பேரெழிலைத் தானே அறியமாட்டாள் என்பதில்லை. ஆனால், அரசிளங்குமரன் அவளை வரிக்க வந்துவிட்டானாயின்! அப்போது அவள் அந்தக்கரணத்தில் ஆனந்தத்தோடு ஆச்சரிய அலைகளுங்கூட எழும்பும் அல்லவா? அப்படித்தான் இருந்தது, அந்த இளஞ் சித்திரகாரனுடைய நிலை.

அவன் மனக்கண் முன்பு ஆகாயமளாவிய கோயிலொன்று நின்றது. 'இந்த அழகிய கோயிலின் சிருஷ்டி ரகசியத்தை உலகத்துக்குப் புலப்படுத்த வேண்டும். சித்திரம் எவ்வளவு அழகாக அமைய வேண்டும், தெரியுமா!' என்று அவன் நினைத்தான்.

காலையும் மாலையும் அவன் கடற்கரைக்குச் சென்று வருவான். நள்ளிரவில் உதிக்கும் அஷ்டமி சந்திரனின் உதயத்தை அவன் கண்டான். குன்றின் மேலிருந்து தென்படும் சுற்றுப்புறத்து யக்ஷபூமியைப் பார்த்தான். ஆனால், அவன் மனம் எதிலும் ஈடுபடவில்லை. பசி எடுத்த குழந்தையை அதன் சிற்றன்னையும் பெரியம்மாவும் அத்தையும் எவ்வளவுதான் சீராட்டினாலும், அதன் ரோதனை நிற்குமா? அதற்குத் தாயின் முன்றானையிலேதான் —

வேட்கையுற்ற அவனுடைய கலைப்பார்வை, தன் தாயைத் தேடிப் பிடித்தது. வயல்வழியே செல்லும் போது, அவன் வலது புறம் திரும்பினான். சமீபத்தில் தான் விதைப்பு ஆகியிருந்தது. பச்சைப் பசே லென்ற வயலின் நடுவே, சில புறாக்கள் உல்லாசமாக அமர்ந்திருந்தன. தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்கு, வயலின் நடுவில் யாரோ வெண்மலர்களைக் குவித்து வைத்தாற்போலத் தோன்றும். ஓவியனின் கால்கள் அந்தப் புறமாகப் பையப் பைய நடந்தன. புறாக்கள் இடையிடையே கழுத்தை வளைத்து இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டும் இடையே அலகினால் எதையோ கொத்திக்கொண்டும் இருந்தன. பசுமையான ரத்ன கம்பளத்தின் நட்டநடுவிலே, நாசுக்காக நடையிடும் அவற்றின் நர்த்தனத் திறமையைக் கண்டு, ஓவியன் தன் மனத்தைப் பறி கொடுத்தான். ஓங்கி வளர்ந்த தென்னைமரங்களின் வரிசையாகிய நிலைக்களம்; சமீ பத்தில் நாற்று விட்ட பயிரின் இளம் பசுமை; வெள்ளைவெளேரென்ற புறாக்கள் - எவ்வளவு அழ கிய காட்சி! அமெரிக்காவின் கரையில் அடி வைத்த வுடனே கொலம்பஸுக்கு என்ன ஆனந்தம் உண்டாகியிருக்கும் என்பதை ஓவியன் இப்பொழுது ஒருவாறு உணர்ந்துகொண்டான்.

தான் கவியாக இல்லையே என்று அவன் வருந்தி னான். எவ்வளவு மனோகரமான காட்சி அது! மேகமில்லாத ஆகாயத்தில் மினுமினுக்கும் நக்ஷத்திரக் கூட்டம், ஒரு பெண்மணியின் முன்றானையிலே உருளும் அழகிய முத்துமாலை; - இவை போன்ற எத்தனையோ சௌந்தரியக் கற்பனைகள், அவ்வழகிய புறாக்களைக் கண்டு அவனுக்குத் தோன்றின. தன்

காலடிச் சப்தத்தைக் கேட்டுப் புறுக்கள் பறந்துவிடாமல் இருக்கவேண்டுமே என நினைத்து, அவன் சற்றுத் தொலைவிலேயே நின்றான். ‘இந்தக் காட்சியை நான் சித்திரித்துவிட்டேனாயின்!—எவ்வளவு மென்மையான பறவைகள்! அவற்றின் நடையிலேதான் என்ன இனிமை! இந்த அழகிய ஓவியத்தின் மாயா ஜாலம்—’ என்று எண்ணமிடலானான். பிள்ளையில்லாத மடந்தை, மழலைச்சொற்கள் பேசும் குழந்தையை எவ்வளவு ஆவலோடு பார்ப்பாளோ, அவ்வளவு ஆவல் நிரம்பிய பார்வை அப்பொழுது அவனுடைய ரஸிகக் கண்களிலே தோன்றியது.

“ஹாூ! ஹாூ! ஹாூ!!”—என்ற கடும் கூச்சலினால் அவனுடைய கலைச் சமாதி கலைந்தது. கந்தையணிந்த, கொழுகொழுத்த, கருமனிதன் ஒருவன் அந்தப் புறுக்களைத் தொலைவிலிருந்தே பயமுறுத்தியவாறு, ஓவியனிடம் வந்துகொண்டிருந்தான். அவனுடைய கர்ண கடோரமான ஒலியைச் செவியுற்ற ஓவியன், தன் சமாதியைக் கலைக்கும் மனிதனைக் கோபத்தோடு பார்க்கும் ரிஷியைப்போல, அந்தப் பட்டிக்காட்டானைச் சுடர்விழியால் நோக்கினான். குடியானவனைப் போல் காணப்பட்ட அம்மனிதன் அருகில் வந்ததும், ஓவியன் அவன்மீது சினந்து வீழ்ந்தான்: “அடே முட்டாள்—!”

“நானா முட்டாள்? நீ மட்டும் பெரிய கெட்டிக்காரனோ?” என்று அவன் குறும்பாகப் பேசினான்.

“பாவம்! பக்ஷிகள் எவ்வளவு அழகாக உட்கார்ந்திருந்தன!”

“தம்மைப் போட்டோ பிடிக்கவேண்டும் என்றே அவை அவ்விதம் உட்கார்ந்திருந்தனவோ!”

"இல்லையப்பா; போட்டோ அல்ல. நான் அவைகளின் சித்திரம் வரைய நினைத்திருந்தேனே?"

"போதும் ஐயா, நீ சித்திரம வரைந்தது! என் பிள்ளைகுட்டிகள் குடிக்கக் கஞ்சி இல்லாமல் சாக வேண்டும் என்பது உன் எண்ணமா?"

சித்திரகாரன் ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தான். கலைக்கு உயிரளிக்கும் புறாக்களுக்கும் இந்தப் பேதை மனிதனின் குழந்தை குட்டிகளின் சாவுக்கும் என்ன சம்பந்தம்?

அவன் குடியானவனை நோக்கிப் பரிகாசத்துடன், "பைத்தியம் பிடித்துவிட்டதா அப்பா, உனக்கு!" என்றான்.

"எனக்கு இல்லை; உனக்குத்தான்! இவ்வளவு நேரம் வரப்பின்மேல் நின்றுகொண்டிருந்தும், ஒரு பறவையை ஓட்ட உன்னால் முடியவில்லையே? நேற்றுத்தான் நாற்று விட்டிருக்கிறது! விதையையே புறாக்கள் தின்றுவிட்டால், என் குழந்தைகுட்டிகள் பட்டினியாகத்தானே சாக வேண்டும்?"

*                    *                    *

விசேஷ மலரில் ஓவியன் வரைந்த அந்த அழகிய காட்சி ஓவியம் வெளிவந்தது. எல்லோரும் அதை ரஸித்தார்கள். அதில் இருந்த புறாக்கள் மாத்திரம் வயலில் உல்லாசமாக அமர்ந்திராமல், பயந்து 'விர்' என்று ஆகாயத்தில் பறந்துகொண்டிருந்தன.

## சகோரமும் சாதகமும்

ஆகாயம் சோகம் பிடித்தாற் போல இருந்தது; அரசன் இறந்த அரண்மனையைப் போலே! சற்று முன்புதான் பூமியில் எங்காவது எரி நக்ஷத்திரம் விழுந்திருக்க வேண்டும். ஒளி வீசும் அந்த நக்ஷத்திரத்தை நினைந்துதான் ஆகாயத்துக்கு இவ்வளவு வருத்தம் உண்டாயிருக்குமோ? சே! கவிகள் கூட இத்தகைய கற்பனையை நம்பமாட்டார்களே!

நான் ஆகாயத்தை உற்றுப் பார்த்தேன்.

ஆகாய மண்டலம் முழுவதையும் 'சாம்பல் நிற மேகங்கள் சூழ்ந்துகொண்டு இருந்தன. அப்போது ஆகாயம் உலகத்தை வெறுத்து விட்டவனுடைய மனத்தைப்போலத் தோற்றியது. அந்த மேகங்கள் அவன் மனத்திலே தோன்றும் தற்கொலைச் சிந்தனைகளைப் போலத் தோற்றம் அளித்தன.

தற்கொலைத் தீர்மானத்தைப் போலவே கன்னங்கரிய மேகமொன்று நடுவே அசையாமல் நின்றிருந்தது. தற்கொலையெண்ணம் நம்பிக்கையை அடியோடு அழித்துவிடுவது போல, அந்தக் கருமுகில் எட்டாம் பிறை அர்த்தசந்திரனை முற்றும் ஒளியற்றவனாக ஆக்கிவிட்டது. குற்றுயிராகிக் கிடந்த அந்த வெண்மதியின் நிலவைக் காட்டிலும் குருடனுடைய கண்ணற்ற பார்வையே மேல்!

விசித்திரமான வெற்றி முழக்கம் ஒன்று என் காதில் விழுந்தது. அந்தக் கருமுகில்தான் ஆனந்தத்

திஞல் கூச்சலிட்டதோ? அல்ல—அது ஆந்தையின் குரலும் அல்லவே!

பின்னுல் திரும்பிப் பார்த்தேன்:

ஒரு பறவை அந்தக் கருமுகிலை ஆவலோடு பார்த்துக் கூவிக்கொண்டிருந்தது: "வா, வா, முகிற் கூட்டமே வா!" என்ற சொற்கள் தெளிவாகக் கேட்டன.

அதன் துயரத்தைக் கண்டு, 'சாபத்தினுல் பூமிக்கு வந்த கந்தர்வனுக இருக்குமோ இது?' என்று எண்ணலானேன். அதற்குள் மற்றொரு திக்கிலிருந்து "சும்மா இரு, சாதகமே! வா, வா, நிலவே வா!" என்று ஒரு குரல கிளம்பியது.

"எங்காவது போய்த் தொலை நீ, சகோரமே!—வா, வா, மேகமாலையே வா!" என்று முதற் பறவை கூவியது. அவ்விரு பக்ஷிகளும் ஒன்றை மற்றொன்று இரக்கமற்ற பார்வையோடு பார்த்துக்கொண்டே மீட்டும் மீட்டும் கூச்சல் போட்டன:

"வா, வா, மேக மாலையே வா!"

"வா, வா, சந்திரிகையே வா!"

அவற்றின் கூக்குரல் ஆகாயத்துக்குக் கேட்டதோ என்னவோ, தெரியாது. ஆனுல் ஆகாயத்தில் ஒரு கணம் நிலவு வீசுவதும் மறுகணம் அந்தக் கருமுகில் வெண்மதியை மறைப்பதுமான விளையாட்டு ஆரம்பமாயிற்று.

"வா, வா, மேகமாலையே வா!" என்று சாதகம் கூவிக்கொண்டே இருந்தது.

"வா, வா, சந்திரிகையே வா!" என்று சகோரம் கத்திக்கொண்டே இருந்தது.

நெஞ்சு உலர்ந்துபோகும் வரையில் அவை கூச்ச

விட்டன. நீர்கொண்ட மேகமும் நிலவு கொண்ட வெண்மதியும் ஆகாயத்தில் கண்ணுமூச்சி விளையாடிக் கொண்டே இருந்தன.

இப்போது அவ்விரு பறவைகளின் கண்களிலும் குரூரமான கழுகுப் பார்வை படர்ந்தது. ஒரு நொடியிலே அவை ஒன்றன்மீது மற்றொன்று பாய்ந்தன. கண் மூடித் திறப்பதற்குள், இரண்டு உடல்களிலிருந்தும் ரத்தம் பெருகிற்று. அந்தப் பயங்கரக் காட்சியை என்னால் பார்க்க முடியவில்லை. முகத்தைத் திருப்பிக்கொண்டேன். சற்று நேரத்துக்கெல்லாம் கூச்சல் ஓய்ந்தது. நகங்களினாலும் அலகுகளினாலும் கொத்திப் பிய்த்து அடிக்கும் ஓசை தேய்ந்தது. அலறல் நின்றது. முதலில் இறக்கைகள் படபடக்கும் ஒலி கேட்டது; மெல்ல மெல்ல அது சலசலப்பாக மாறியது. அப்புறம் - அமைதி - எல்லாம் அமைதி!

நான் பார்த்தேன்: இரண்டு பறவைகளும் பூமியிலே செத்துக் கிடந்தன. சற்று நேரத்திற்கு முன்பு உயிரோடு கம்பீரமாக வளையவந்த அவ்வுருவங்கள் எங்கே! இதோ தரையில் சாய்ந்து கிடக்கும் கோணல்மாணலான பிணங்கள் எங்கே! அடடா! ஆகாயத்தை நோக்கினேன். என்னைச் சமாதானப் படுத்த வேண்டியே அங்கே தேவாதிதேவன் தோன்றினானே!

அந்தக் கருமுகிலிலிருந்து இப்போது படபட வென்று நீர்த்துளிகள் விழுந்தன. ஆனால் அவற்றிற்காக வேட்கையுற்றிருந்த சாதகம் வாய் திறக்கவில்லை.

தூறல் நின்றவுடனே நிலவு பொழிந்தது. ஆனால் சந்திரிகைக்காக ஆசைப்பட்டுக் காத்திருந்த சகோரம் அதை வரவேற்கக் கழுத்தை அசைக்கவில்லை.

அவ்விரு பறவைகளுடைய பிணங்களின மேலும் தேங்கிய நீர்த்துளிகளின்மீது நிலவு மிளிர்ந்தது!

# தெய்வமும் கோயிலும்

எவ்வளவு மனமோகனமான பிம்பம் அது!

இவ்வளவு அழகிய உருவத்தை எங்கே வைக்கலாம் என்று பக்தர்களிடையே கேள்வி பிறந்தது. 'பக்தனுடைய இருதயமே என் ஸ்வர்க்கம்' என்றது தெய்வச் சிலை.

ஆனால் இருதயத்திலுள்ள உருவம் கண்களுக்குத் தென்படுவது எப்படி? எல்லாப் பக்தர்களும் ஒன்று சேர்ந்து சிலைக்காக அழகிய கோயில் அமைக்க நிச்சயம் செய்தார்கள். ஒருவர் சந்தனமரம் கொண்டு வந்தார். மற்றொருவர் அதில் சித்திரவேலை செய்தார். ஸ்வர்க்கத்தில் இருந்த சௌந்தரியங்கள் யாவும் அந்தக் கோயிலில் வந்து இறங்கின.

கோயிலில் இருந்த சிலைக்குத் தினந்தோறும் பூஜை ஆரம்பமாயிற்று. 'கோயிலுக்கு அழகு தரும் அழகிய பூக்களைக் கொண்டுவருபவர் யார்?' என்பதைப்பற்றிப் பக்தர்களுக்குள் போட்டி உண்டாயிற்று. தூபம், தீபம், நைவேத்தியம், கோயிலை அழகாக்கும் பூசைத் திரவியங்கள் இவைகளைக் கொண்டு சேர்ப்பதில் ஒவ்வொரு பக்தனும் முனைந்திருந்தான்.

உற்சவ நாள் வந்தது. கோயில் முழுவதும் பூக்களால் நிரம்பியது. தூபம் கண்ணுக்குத் தெரியாத வாசனைப் பூக்களை மலர்வித்தது. விளக்குகள் தாரகைகளோடு போட்டியிட்டன. பக்தர்களின் கூட்டம் பூஜையை முடித்துக்கொண்டு, அளவற்ற திருப்தியுடன் திரும்பியது. திரும்பி வரும் வழியில்

ஏதோ காலில் தட்டுப்படுவதைக் கண்டு, ஒவ்வொரு வனும் திரும்பிப் பார்த்தான்.

கோயிலில் இருந்த தெய்வச் சிலை அது! ஆனல் ஒருவனுவது அதை அறிந்துகொள்ள முடியவில்லை. ஒவ்வொரு பக்தனும் அதை மிதித்துக்கொண்டே நடந்துபோனுன்.

# பூமி

தான் வாசம் செய்யும் பூமி மிகவும் அற்பமென்று மனிதனுக்குத் தோன்றலாயிற்று.

அவன் மலையைப் பார்த்தான். அதனுடைய அந்த உன்னதமான சிகரம்: ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களைத் திரட்டுவதற்காகப் பர்வதம் கை நீட்டினாற் போல இருந்தது அது!

பூமியைத் துச்சமாகப் பார்த்துவிட்டு மனிதன் மலைமேல் ஏற ஆரம்பித்தான்.

பாறைகள் தடுக்கின; கால்களில் முட்கள் குத்தின. ஆயினும் அவன் மேன்மேலும் ஏறிக் கொண்டே போனான்.

காலை வீசி நடந்துகொண்டே, அவன் மலையுச்சியை எட்டினான். மலைமேல் ஏறுவதற்கு முன்பு, 'பாரிஜாதக் கிளையை ஆட்டினால் மலர்கள் கொட்டுவது போல, நாம் மலையுச்சியிலிருந்து ஆகாயத்தை ஆட்டினால் நக்ஷத்திரங்கள் உதிரும்' என்று அவன் நினைத்திருந்தான். ஆனால் இப்போது அவனுக்கு வேறோர் அநுபவம் உண்டாயிற்று. ஆகாயம் இன்னமும் முன்பு இருந்த அத்தனை தூரமே இருந்தது. நக்ஷத்திரங்கள் கண்ணைச் சிமிட்டி, அவனைப் பார்த்து நகைத்தன.

பசியினால் அவன் தவியாகத் தவித்தான். அந்த மலையுச்சி அவன் கண்ணுக்குப் பட்டுப்போன மரத்தைப் போலத் தோன்றியது.

அவன் தன் எதிரே பார்த்தான்:

கடலலைகள் கும்மியடிக்கும் பெண்களைப்போலத் தோன்றின.

அவன் கீழே பார்த்தான் :

மேடும் பள்ளமுமான கன்னங்கரிய பூமி, கிழிந்து போன கந்தைக் கம்பளத்தைப் போலத் தோற்றியது.

அவன் மீண்டும் முன்புறம் பார்த்தான் :

கடலின் நீல நிறப் பரப்பு ரத்ன கம்பளம் போலத் தோன்றியது. அந்த ரத்ன கம்பளத்தில் மின்னும் சிறிய பூக்கள் ! அது அலைகளின் நுரை என்பது அவனுக்கு உண்மையாகவே படவில்லை.

அவன் ஒரே ஓட்டமாக மலையிலிருந்து இறங்கினான். பூமியைத் திரும்பிக்கூடப் பாராமல் கடலை நோக்கி ஓடினான்.

ஓடிக்கொண்டே, "நக்ஷத்திரங்கள் கிடைக்காவிட்டால் போகட்டுமே; கடலிலுள்ள ரத்தினங்கள் நமக்குக் கிடைக்கத் தடை என்ன?" என்று மனசோடு சொல்லிக்கொண்டான்.

மணல்வெளிக்கு வந்தபொழுது, அவனுக்கு நெஞ்சு உலர்ந்துபோயிற்று. தாகத்தினால் தவித்த அந்த ஜீவன், கடல்நீரில் வாய் வைத்ததுதான் தாமதம் ; ஒரேயடியாக உப்புக் கரித்தது.

வந்த வழியே, அவன் பூமியை நோக்கித் திரும்பினான்.

சாலையோரத்தில் ஒரு சிறு கிணறு தென்பட்டது. அந்தக் கிணற்றுநீரை அவன் பருகினான். கிணற்றுக்கு அருகிலேயே இருந்த மாமரத்து நிழலில் உட்கார்ந்தான். அந்த நிழல் அவனுக்கு அபூர்வமான ஆனந்தத்தைத் தந்தது. அதற்குள் மரத்திலிருந்து மாங்கனி ஒன்று விழுந்தது. அதைச் சுவைத்தவன்

ணம், 'ஆகாயத்திலுள்ள எல்லா நக்ஷத்திரங்களும், கடலிலுள்ள எல்லா ரத்தினங்களும், இந்த அற்பமான பூமியின் ஒரு சின்னஞ்சிறு துகளுக்குக்கூட ஈடாக மாட்டா' என்று அவன் நினைக்கலானான்.

## மங்களூர் ஓடு

### 1

புதிய பங்களா. மேலே மங்களூர் ஓடு மிகவும் சிவப்பாகவும் அழகாகவும் தோற்றியது.

மாலைவேளையில் உலாவிவிட்டுத் திரும்பும் பொழுதெல்லாம் தொலைவிலிருந்து அந்தப் பங்களா தென்படும்; என் பார்வை அந்த ஓட்டின்மீதே நிலைத்து விடும்.

காதலின் நிறம் சிவப்பாக இருக்கும் என்பார்களே!

அக்கம்பக்கத்திலுள்ள எல்லா வீட்டு ஓடுகளும் கறுப்பாக இருக்கின்றன.

என் பங்களாவின் ஓடுகள்! உலகத்தில் ஒட்டிக் கொள்ளாமல் விலகியிருக்கும் துறவியின் மனத்தைக் கொண்டோ அல்லது கவியின் • உள்ளத்தைக் கொண்டோ அவற்றைப் படைத்திருக்க வேண்டும்!

வெகு நாள் வரையில் அவை என் பார்வையில் படும்போதெல்லாம், விழிகள் பிதுங்கிப்போவது போல நான் அவற்றைப் பார்ப்பேன்.

### 2

இரண்டு மூன்று மழைக் காலங்கள் கடந்தன.

இரண்டு வருஷங்கள் கழித்து, நான் ஊருக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தேன்.

கோயில் தென்பட்டது; ஆலமரம் வந்தது; தென்னை மரங்கள் பின்னால் சென்றன. இன்னும்

சற்று முன்னே சென்றால், என் பங்களாவின் சிவப்பு ஓடுகள் தென்படும்.

நான் முன்னால் ஓடிச் சென்றேன்.

கண்களை விழித்துவிழித்துப் பார்த்தேன். ஆனால் சிவப்பு ஓடுகளை எங்கும் காணவில்லை. என் பார்வை மங்கிவிட்டதோ என்ற சந்தேகம் எனக்கு உண்டாயிற்று.

இதுதான் அந்தப் பங்களா. பார்வை சட்டென்று மேலே சென்றது; அடங்கிய ஆவலோடு உடனே கீழே தாழ்ந்தது.

அந்தச் சிவப்பு ஓடுகள் கறுப்பாகி யிருந்தன.

மற்றப் பழைய பங்களாக்களைப்போலவே என் பங்களாவும் தோற்றியது.

ஏதோ இனிய மெல்லிய நாதத்தைக் கேட்டு என் பார்வை திரும்பியது. ஒரு புறா அங்கே உல்லாசமாக உட்கார்ந்திருந்தது. அதன் நிறந்தான் என்ன வெண்மை! அது குழந்தையுள்ளந்தான் போலும்! அந்தப் புறாவைப் பார்த்துக்கொண்டே, நிறம் மாறிய ஓடுகளைப்பற்றிய துன்பத்தை மறந்துவிட்டேன்.

## 3

மறுநாள் காலையில் உலாவிவிட்டு வருகையில், பங்களா தொலைவிலிருந்தே தெரிந்தது. சிவப்பு மங்களூர் ஓடு—.

புறா அந்த மூலையிலேயே இருக்குமா?

வீட்டு வாசலிலிருந்து பார்த்தேன். புறா ஒரு பாடகனைப் போல உல்லாசமாக மார்பை விரித்துக் கொண்டு கூவியது. அது கூவியதன் கருத்து எனக்குப் புரியவில்லை. ஆனால் அதைக் கேட்டு என் மனத்துக்கு ஆறுதல் மட்டும் உண்டாயிற்று.

## கடலே, அகஸ்தியன் வருகிருன்!

பழங் காலத்துக் கதை இது. பூமியிலுள்ள பொன் மயமான மலைகளின் ரத்தினங்களிழைத்த சிகரங்களைக் கடல் தூரத்திலிருந்து பார்த்தது. கதிரவனின் கிரணங்களில் அவை பளபளவென்று மின்னின. குபேரன் தன் பொக்கிஷத்தையெல்லாம் கொணர்ந்து அவற்றின்மீதே குவித்துவிட்டானே என்று தோற்றியது. கடல் தன் சொந்தப் பொக்கிஷத்தைப் பார்த்தது. அதில் சங்குகள், சிப்பிகள், கடல்நுரை, மணல் - இவற்றைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை!

கடல் பூமியினிடம் பிச்சை கேட்க வந்தது. அலைகளாலாகிய குடலைகளில் மல்லிகைமலர்களை நிரப்பிக் கொண்டு வந்து, பூமியின் திருவடிகளில் தூவியது. பூமியின் வள்ளன்மையைப்பற்றிக் கம்பீரமாகப் புகழ்ந்து போற்றியது. பூமி பிரசன்னமாயிற்று.

கடல் வரம் கேட்டது; பூமி அதைக் கொடுத்தது. இடைவிடாமல் பிரதக்ஷிணம் செய்யவும், அபிஷேகம் செய்த நீரைத் தீர்த்தமாக உபயோகிக்கவும் அநுமதி வேண்டுமென்று கடல் கோரியது. பூமிக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. 'இந்தக் கடல் வெறும் பைத்தியம் போல இருக்கிறதே! என்னிடம் இருக்கும் ரத்தினங்களைக் கேட்கக்கூட இதற்கு அறிவு இல்லையே!' என்று தனக்குள் சொல்லிக்கொண்டது.

வருணன் மேகக் குடங்களைக் கொண்டு தினமும் பூமிக்கு அபிஷேகம் செய்வது வழக்கம். மலைகளாகிய தர்மகர்த்தாக்களுக்கெல்லாம் பூமி உத்தரவிட்டது.

அபிஷேகம் செய்த நீர் முன்போல மலைகளின் அடி வாரத்தில் தங்காமல், கடலை நோக்கிப் பெருகலா யிற்று. மெல்ல மெல்ல அந்த நீரோடு கூடவே, மலை யுச்சிகளில் இருந்த ரத்தினங்களும் சரிந்து ஓடலா யின. மலைகளின் பொன்னிற உடல் நன்கு அலம்பப் பெற்று, மேற்பரப்பு முழுவதும் கரைந்து போயிற்று. அங்கே கடல் ரத்திஞகரமாயிற்று; இங்கே பூமி ஏழையாயிற்று.

முற்றும் ஏழையான பின்புதான், கடலின் சதி யாலோசனையைப் பூமி அறிந்தது. தன்னைச் சுற்றி மிகவும் தொலைவிலிருந்து பிரதக்ஷிணம் செய்யும் சந்திரனிடத்தில் அது இந்தச் செய்தி முழுவதையும் கூறியது. ஆனல் தன்னைக் கண்ட மாத்திரத்தில் ஆனந்தக் கூத்தாடும் கடல் இவ்வளவு கபடமாக நடந்துகொள்ளும் என்ற விஷயத்தில் வெண்மதிக்கு நம்பிக்கையே உண்டாகவில்லை. பூமி சூரியனிடம் விண்ணப்பம் செய்தது ; ஆனல் அது கடல்நீரைக் குடித்துக் குடித்து ஏற்கனவே கடலுக்கு ஆட்பட்டி ருந்தது. தனக்கு உதவி செய்ய யாருமே வராததைக் கண்டு, பூமிக்குக் கோபம் பொங்கியது. கோபத்தால் அதன் உடல் படபடத்து நடுங்கியது. பாவம்! அதன் மார்பில் இருந்த அழகிய நகரங்களாகிய அணிகலன் களே இதனல் நாசமாயின. கோபம் மனத்துக் குள்ளே அடங்காதபோது, அதன் கண்களிலிருந்து கொதிகொதிக்கும் நெருப்புத் திரவம் பெருகும். ஆயினும் தன் மனத்தைப்போலவே உடலையும் எரித்துக்கொள்வதைத் தவிர, இதனல் வேறு ஒன்றும் லாபமில்லை என்பதை அது அறிந்துகொண்டது.

ஒரு காலத்தில் செல்வம் மிகுந்திருந்து, இப்

போது பரம தரித்திரமாகிவிட்ட பூமி, நம்பிக் கையை இழந்த மனத்தோடு சிந்தனை செய்யலா யிற்று. மலைகள் யாவும் கல்லுருவாயின. நகரங்களின் களை மங்கிப்போயிற்று. அரசர்களின் பொக்கிஷங்களி லுங்கூட ரத்தினங்கள் காலியாயின. ரத்தினக் களஞ் சியம் முழுவதையும் தன் அந்தரங்கத்திலே வைத் துக்கொண்டு, கடல் பூமியின் ஏழைமையைப் பார்த் துப் பரிகாசம் செய்ய ஆரம்பித்தது.

பூமித்தாய் நம்பிக்கை தோன்றும் கண்களோடு தன் பிள்ளைகளைப் பார்த்தாள். எத்தனையோ பிருகஸ் பதிகள் எழுந்து நின்றார்கள்; கடலினிடம் போய் இனிய மொழிகளால் வணக்கமாக விண்ணப்பம் செய் தார்கள். கரையில் நின்றுகொண்டே ரத்தினங்களைக் கேட்கும் இந்தப் பலவீனர்களைக் கண்டு, "ரத்தினங் களைக் காக்கும் சக்தி உங்களிடம் இல்லை; அதனால் தான் அவற்றை நான் வைத்திருக்கிறேன். நீங்கள் சாமர்த்தியசாலிகளானவுடனே அவற்றைத் திருப்பிக் கொடுத்துவிடுவேன்" என்று கடல் பதில் சொல்லி யது. பேச்சில் வல்லவர்களான அந்தப் பிருகஸ்பதிகள் தமக்கு வெற்றி கிடைத்துவிட்டதென்று ஆனந்த மாகத் திரும்பி வந்தார்கள். சொற்களினால் செல்வ மோ சுதந்தரமோ கிடைக்காது என்பது பாவம், அவர்களுக்கு அடியோடு தெரியவில்லை.

ஆண்டுகள் பல உருண்டன. பூமியில் வாழும் குடிமக்கள் பலவீனர்கள் என்ற கடலின் கொள்கை நிலைத்துவிட்டது. பூமி சலிப்படைந்து, தன் வீர புத் திரர்களைப் பார்த்தது. அவர்கள் கடலின்மீது படை யெடுத்தார்கள். ஆனால் பிரசண்டமான கடலலைகளின் முன்பு அவர்கள் ஜம்பம் ஒன்றும் சாயவில்லை. சில

அப்பொழுதே கரையை நோக்கித் திரும்பினார்கள். ஆனால் கடலின் அந்தரங்கத்துக்குப் போகும் தீரச் செயலை மேற்கொண்ட மற்றவர்களின் விஷயமோ ? அவர்களுடைய பிணங்கள்கூடக் கைக்கு எட்டவில்லை!

பூமியின் ஆசாபங்கம் உச்சநிலையை எய்தியது. விளக்கின் மீது துள்ளிப் பாயும் விட்டிற் பூச்சியைப் போல, சூரியனிடமுள்ள எரிமலை மீது மோதி எரிந்து போனால் என்ன என்றுகூட அது நினைத்தது. வெறி பிடித்த கடலின் அலைகள் ஆகாயத்துக்குச் சென்று மோதின. இதற்குள் எங்கிருந்தோ, "அம்மா, பயப்படாதே" என்று மதுரமும் ஆனால் கம்பீரமுமான ஒரு குரல் வந்தது.

ஒரு ரிஷிகுமாரனுடைய பேச்சு அது. அவன் உடனே கடலினிடம் சென்று, ரத்தினங்களைக் கொடுக்கும்படி கேட்டான். அவனுடைய ஒல்லியான உருவத்தைக் கண்டு கடல் நகைத்தது; "ஸ்நானத்தையும் ஸந்தியாவந்தனத்தையும் விட்டு நீ எதுக்கு அப்பனே இந்தத் தொந்தரவுக்கு வருகிறாய்? ஒரே அலையால் நான் உன்னைப் பொடி சூர்ணமாக்கிவிடுவேனே!" என்று அது நையாண்டி செய்தது.

ரிஷிகுமாரன் அதன் பேச்சைப் பொருட்படுத்தவில்லை. முழங்காலளவு நீரில் நின்றுகொண்டு அவன் மந்திரம் ஜபிக்கலானான். கடல் கிறுக்குத்தனமாக, "ஓய் ரிஷிபுங்கவரே! தலையைக் கீழே தொங்கப் போட்டுக்கொண்டு வேதாத்தியயனம் செய்யும் இடம் இது அல்ல. வீணாக உங்கள் உயிரை ஆபத்துக்கு உள்ளாக்க வேண்டாம்" என்றது.

ரிஷிகுமாரன் தன் பேச்சைக் கேட்காமலிருக்கவே, கடல் அவன்மீது மலைகளைப்போன்ற அலைகளை

வீசி எறிந்தது. ஆனல் அவை அவனருகில் செல்லவே இல்லை.

ரிஷிகுமாரன் மந்திரத்தை ஜபித்து ஆசமனம் செய்ய ஆரம்பித்தான். கடல்நீர் பரபரவென்று வற்றத் தொடங்கியது. எத்தனையோ ஆள் ஆழ முள்ள நீர் இருந்த இடத்தில் மணல் தென்படலாயிற்று.

பூமியின் ரத்தினங்கள் அதற்குத் திரும்பக் கிடைத்தன. அது ரிஷிகுமாரனின் முதுகை அன் போடு தட்டிக் கொடுத்து, "குழந்தாய், உன் பெயர் என்ன ? யுத்தவீரர்களும் பண்டிதர்களும் தோற்றுப் போன இடத்தில் நீ எப்படிப் புகழைச் சம்பாதித் தாய் ?" என்று கேட்டது.

குமாரன் பூமியை வணங்கி, "தாயே, என் பெயர் அகஸ்தியன். உன் அருளினல் எனக்குப் புகழ் கிடைத்தது. என்னிடம் பண்டிதர்களுடைய சொற்கள் இல்லை ; வீரர்களின் ஆயுதங்களும் இல்லை. உன்னிடம் நான் கொண்டுள்ள பக்திதான் என் பேச்சுவன்மை ; அதுதான் என் ஆயுதம்" என்றன்.

ரிஷிகுமாரன் இரக்கத்தினல் மனங் கனிந்து, கடலுக்கு அதன் உயிரைத் திருப்பிக் கொடுத்தான். மணல் பரந்திருந்த இடத்தில் மீண்டும் எத்தனையோ ஆள் ஆழமுள்ள நீர் கூத்தாடத் தொடங்கியது.

அகஸ்தியன் தவம் புரியக் காட்டுக்குச் சென் றன்.

செல்வம் படைத்த பூமியைக் கண்டதும், அதன் செல்வத்தைக் கவரவேண்டும் என்ற பேராசை இடையிடையே கடலுக்கு உண்டாகிறது. தன் தோல்வியை மறந்து, அது வேகமாக முன்னல் பாய்

கிறது. அது எல்லை மீறி வருவதைக் கண்டவுடனே, கரையிலுள்ள மரங்களும் கொடிகளும் மணலும், "கடலே, அகஸ்தியன் வருகிறான்! கடலே, அகஸ்தியன் வருகிறான்!" என்று உரக்கக் கூவுகின்றன. கடலின் முகம் உடனே சுண்டிப்போகிறது. பொங்கிக் கொண்டிருந்த அதன் பேராவல் மறைந்து, அது வற்ற ஆரம்பிக்கிறது. எவ்வளவு வேகத்தோடு அது முன்னால் பாய்ந்ததோ அவ்வளவு வேகமாகவே அது பின்னுக்குப் போகிறது!

# இரண்டு ஓவியர்கள்

ஒரே அழகியை இரண்டு ஓவியர்கள் காதலித்தார்கள். அவர்கள் இருவரில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்று அவளுக்குப் புரியவில்லை.

இருவருடைய சுபாவங்களும் திராக்ஷைக் கனியைப்போல இனிமையாக இருந்தன.

இருவருடைய கலைகளும் மின்னலைப்போல ஒளி வீசின.

இருவருடைய உருவங்களும், பிரம்மா ஒரே பிம்பத்தை இரண்டு ஓவியங்களாக வரைந்தானே என்று சொல்லும்படி இருந்தன.

* * *

அழகியின் தோழியர் அவளிடம், "நீ ஏதாவது ஒரு பணயம் வை. அதில் எவன் வெற்றி பெறுகிறானே அவனுக்கே மாலையிடு" என்றார்கள்.

ஆனால் எதைப் பணயமாக வைப்பது?

வில்லை முறிப்பதா? சே! தூலிகையைக் காட்டிலும் கனமான வஸ்துவை அவ்விருவரில் ஒருவனாவது கையால் எடுத்ததில்லையே!

மத்ஸ்யத்தைப் பேதிக்கும் பணயமா?

இருவருமே ஓவியர்களாகப் பிறந்தவர்கள். மீனைக் குறி பார்த்து அடிப்பதற்குப் பதிலாக, அதன் அழகிய கண்களையே அவர்கள் பார்த்துக் கொண்டிருப்பார்கள்!

* * *

வெகு நேரம் சிந்தித்தபின்பு அவளுக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று.

அவர்கள் இருவரையும் கூப்பிட்டு, "எனக்கு ஒரு சித்திரம் வேண்டும்" என்று சொன்னாள்.

"ஒன்று ? சித்திரங்களையே நடைபாவாடையாக அமைத்துக்கொண்டு வேண்டுமானால் பூப் பிரதக்ஷிணம் செய்" என்றான் முதல்வன்.

இரண்டாமவன், "உனக்கு எத்தகைய சித்திரம் வேண்டும் ?" என்று கேள்வி கேட்டான்.

"மாலைநேரத்துச் சித்திரம்."

இரண்டு ஓவியர்களும் மாலைநேரத்துச் சித்திரம் வரைய, சேர்ந்தாற்போல் உட்கார்ந்தார்கள். அந்த அழகியின் ரஸிகத்தன்மையை நினைந்து இருவருமே வியந்தார்கள். 'இயற்கையினிடத்திலே உள்ள மிகவும் அழகிய சித்திரம் மாலைவேளைதான்' என்றது அவர்களுடைய கலைப்பார்வை.

இனிய மாலை நிறங்கள் கிர் கிர் என்று மாறிச் சுழன்றன. இளம்பருவத்து மங்கையின் உள்ளத்திலே எழும் காதல் உணர்ச்சிகளோ இவை என்று தோன்றின.

கதிரவனின் சூடு அணுவளவும் தென்படவில்லை. அந்தப்புரத்து வாசலில் நிற்கும் வீர புருஷனுடைய வதனத்தில் கடுமையின் நிழலை யாராவது பார்த்தது உண்டா ?

பறவைகள் கூட்டங் கூட்டமாகக் கூடுகளை நோக்கி விரைந்தன. ஆனந்த அலைகள் உருவெடுத்துப் பாய்ந்தால், இப்படித்தானே தென்படும் ?

இரண்டு கலைஞர்களும் இனிய கற்பனை அலைகளில்

விளையாடிக்கொண்டே மாலையழகை ஆவலோடு பார்த்துக்கொண் டிருந்தனர்.

காற்றினல் உதிர்ந்த சருகு ஒன்று அந்தரத்தில் மிதந்துகொண்டே வந்து முதல் ஓவியனுடைய உடலின்மேல் விழுந்தது. எதிரே காணும் அழகிய காட்சிக்கு அது அடியோடு ஒவ்வாதது என்று அவனுக்குத் தோன்றிற்று.கோபாவேசத்தில் அவன் அதைப் பொடி சூர்ணமாக்கிவிட்டான். பக்கத்திலே ஆட்டு மந்தை ஒன்று குதித்துக்கொண்டே போயிற்று. கன்னங் கரியகிழக் கோவலன் எருமைக் குரலில் பாடிக் கொண்டே அந்த மந்தைக்குப் பின்னல் போனன். அவன் கையில் ஏதோ ஒன்று இருந்தது. ஆனல் அது என்ன என்று தென்படுவதற்கு முன்பே, முதல் ஓவியன், "அடே கிழவா, பெரிய பாடகனகிவிட்டாயோ நீ, பாட்டுப் பாட!" என்றன்.

கிழவன் திடுக்கிட்டான். சட்டென்று முதுகைத் திருப்பிக்கொண்டு நொடிப்பொழுதில் மறைந்து போனன்.

* * * *

நேர்த்தியான மெல்லிய திரையினல் மூடிய இரண்டு சித்திரங்கள் அழகியின் அந்தப்புரத்துக்கு வந்தன. இரண்டு ஓவியர்களும் அவரவர் சித்திரத்தின் அருகில் நின்றர்கள். கையில் மாலையை ஏந்தி, அழகி முன்னல் வந்தாள். அவள் கைகள் மட்டுமல்ல, இருதயமும் நடுங்கிக்கொண்டிருந்தது.

முதல் ஓவியன் தன் சித்திரத்தின் திரையை விலக்கினன்.

'ரங்கநாதன்' என்பது சித்திரத்தின் பெயர். மாலை நேரத்துக் கதிரவன் ராஸக்கிரீடை செய்கிறன்;

பலவித நிறங்களால் தம்மை அலங்கரித்துக்கொண்ட மேகமாலைகள் கோபிகளைப்போல அவனைச் சுற்றி வட்டமிட்டுக் கும்மியடிக்கின்றன. சாயங்காலத்தில் வீடு திரும்பும் மாடுகன்றுகள் இந்த ரங்கநாதனின் குழலோசையில் மயங்கித்தான் அப்படி ஓடுகின்றனவோ என்று தோற்றியது.

அவனுடைய தூலிகை தன் மாயவித்தையினால் சாயங்காலத்து அற்புதம் முழுவதையும், அழகு முழுவதையும், வசபடுத்திக்கொண்டது.

இரண்டாவது ஓவியன் பயந்துகொண்டே தன் சித்திரத்தின் திரையை அகற்றினான்.

'முகிலழகன்' என்பது சித்திரத்தின் பெயர். அந்த ஓவியத்தில், அழகிய மாலைப்பொழுது யாரையோ அன்போடு பார்த்துக்கொண்டிருப்பது போலத் தோறறியது. ஒரு கிழக் கோவலன் உருவம் அது. தாடி வளர்ந்து, மூலைக் கோவணம் கட்டிய அந்த மனிதன், அறுவடையான வயல் வழியே மெதுவாகப் போய்க்கொண்டிருந்தான்.

அந்த ஆயன் ஓர் ஆட்டுக் குட்டியை மார்பில் அணைத்திருந்தான். முன்னால் போகும் மந்தையிலிருந்து ஒரு வெள்ளாடு பின்னால் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டிருந்தது. அதுதான் அந்த ஆட்டுக் குட்டியின் தாயாக இருக்கவேண்டும்.

அழகி இரண்டாவது ஓவியன் கழுத்தில் புஷ்ப மாலையை அணிந்தாள். உடனே, முதல் ஓவியனின் பக்கமாகத் திரும்பி, "உங்களுடைய சித்திரம் எத்தனை அழகாக இருக்கிறது, அண்ணா! தங்கைக்குப் பரிசாக நீங்கள் அதை எனக்குக் கொடுத்துவிட வேண்டும்" என்றாள்.

# மண்ணுலகத்து நட்பு

'இரண்டு உடல், ஆனால் ஓர் உயிர்' என்று சொல்லும்படியாகத்தான் அவர்கள் விண்ணுலகத்தில் பழகினார்கள். அமுதம் பருகுவதாயினும் சரி, கற்பக மரத்தின் நிழலில் சாப்பாட்டுக்குப் போவதாயினும் சரி, பாரிஜாத மலர்களைப் பறித்து அவற்றை அப்ஸரப் பெண்களுக்கு அர்ப்பணம் செய்வதாயினும் சரி - எந்த விஷயத்திலும் அவ்விருவருக்குள்ளும் வேற்றுமை ஏற்பட்டதில்லை; பொறாமை என்றுமே அவர்களைத் தீண்டியதில்லை.

அவர்கள் புண்ணிய மூட்டை ஒரே சமயத்தில் காலியாயிற்று. இருவரையும் ஒருங்கே மண்ணுலகத்துக்கு அனுப்புவதென்று தீர்மானம் ஆயிற்று. இரண்டு பேருக்கும் அதனால் ஆனந்தம். அவர்கள் தேவாதிதேவனை நோக்கி, "இறைவ, எங்களுக்கு எந்தப் பிறப்பை வேண்டுமாயினும் கொடு. ஆனால் எங்கள் இருவரையும் ஒரே இடத்தில், அக்கம்பக்கத்தில் வாழுமாறு மட்டும் பிறப்பிக்க வேண்டும். நாங்கள் இருவரும் ஒன்றாக வாழ்ந்தால், மண்ணுலகத்தில் கூடத் தெய்விக இன்பத்தைப் பெறுவோம்" என்று வேண்டிக்கொண்டார்கள்.

தேவாதிதேவன் புன்முறுவல் பூத்து, அவர்கள் வேண்டுகோளுக்கு இசைந்தான்.

* * *

அவர்கள் இருவரும் காட்டில் மரங்களாகப்

பிறந்தனர். இரண்டு மரங்கள் ஒன்றோடொன்று பிணைந்து வளர்ந்தன. ஆனால் அவற்றில் ஒன்று நீள மாக வளர்ந்தது. அதன் கிளைகள் நாலுபுறமும் பரவின. மற்றொன்று குட்டையாகவே இருந்தது. குட்டை யான மரத்துக்கு எப்போதும் வெயில் தேவையாக இருக்கும். அது நெட்டையான மரத்தைப் பார்த்து, "அண்ணா, உன் கிளைகளைச் சற்று அந்தப் புறம் ஒதுக் கிக்கொள்ளேன்! எனக்குக் கொஞ்சமாவது வெயில் கிடைக்கும்" என்று கெஞ்சி வேண்டிக்கொள்ளும்.

நெடிய மரத்தின் கிளைகள் அதைப் பரிகாசம் செய்துகொண்டே கைகளை இங்குமங்கும் ஆட்டுவ தோடு சரி! குட்டை மரத்துக்கு வெயில் கிடைக்கும் படி அது விடவே இல்லை.

நிழலில் முளைத்த அந்தக் குட்டை மரம், சீக்கி ரமே வாடிக் கருகி மாய்ந்தது.

"அடுத்த பிறப்பு உனக்கு எவ்விடத்தில் வேண் டும்?" என்று தேவாதிதேவன் அதைக் கேட்டான்.

அப்போது அதன் மனத்தில் கலவரம் உண்டா யிற்று. அது வெகுநேரம் யோசனை செய்தது. கடைசி யில் தன் ஸ்வர்க்கத்து நட்பை ஞாபகப்படுத்திக் கொண்டு, தன் நண்பன் மறுபடி எங்கே பிறப்பானோ அவ்விடத்திலேயே பிறப்பது என்று தீர்மானித்தது.

* * * *

அவ்விரு நண்பர்களும் மான்களாகப் பிறந்தனர். காட்டில் புல்லும் நீரும் ஏராளமாக இருந்தன. இரண்டு மான்களும் வயிறு நிரம்பப் புல்லைத் தின்று நீர் அருந்தும்; இங்குமங்கும் நாட்டியமாடித் திரியும்; எழும்பி எழும்பிக் குதிக்கும். ஸ்வர்க்க சுகத்தில் மட் டும் இதைவிட அதிகமாக என்ன இருக்கிறது? ஆனால்,

ஸ்வர்க்கத்தில் இல்லாத ஒரு விஷயம் இங்கே இருந்தது: அடிக்கடி அவை இரண்டுக்கும் ஏதாவது ஒரு சச்சரவு வந்துவிடும். 'நம் இருவரில் யாருடைய கொம்புகள் அழகாயிருக்கின்றன?' என்பதைப்பற்றி அவை இரண்டுக்கும் ஒரு நாள பலத்த விவாதம் உண்டாகி, கடைசியில் அது அடிதடிச் சண்டைவரையில் போய்விட்டது.

இரண்டு மான்களும் வளர்ந்து பெரியவை ஆயின. ஒரு நாள் ஒரு பெண்மானைப்பற்றி இரண்டுக்கும் சச்சரவு வந்துவிட்டது. இரண்டுக்குமே அது திலோத்தமையைப் போன்ற அழகியாகத் தோற்றியது. ஸுந்தன், உபஸுந்தன் ஆகியவர்களின் கதை மீண்டும் அந்தக் காட்டில் நடக்குமோ என்று அன்றைத்தினம் எல்லாப் பிராணிகளும் பயந்தன.

ஆனால் மொத்தத்தில் இப்படி மனஸ்தாபம் உண்டாகும் சம்பவங்கள் குறைவாகவே இருந்தன.

ஒரு நாள் அந்தக் காட்டில் வேடர்கள் புகுந்தனர். உயிருக்கு அஞ்சி, மிருகங்கள் யாவும் கும்பல் கும்பலாக ஓடின. நட்பினால் தளைபட்ட அவ்விரு மான்களுங் கூட ஒன்றாக ஓடின. பிராண சங்கடத்தில்கூட ஒன்றையொன்று விடக்கூடாது என்று அவை தீர்மானித்திருந்தன.

எங்கிருந்தோ ஒரு வேடன் அவை இரண்டையும் நோக்கி வந்தான். ஒரு மான் அவனைப் பார்த்தது. ஓடிக்கொண்டே இருக்கையில் அது பட்டென்று தரையில் சாய்ந்தது. 'நம் நண்பன் செத்துப்போனான்; இனி அவனைப் பார்த்துக்கொண்டிருப்பதில் பயன் இல்லை' என்று நினைத்து, மற்றொரு மான் ஓடிக்கொண்டே இருந்தது. அடுத்த கணத்தில் அந்த மானின்

உடலிலும் அம்பு பாய்ந்தது. அப்போது தரையில் விழுந்துகிடந்த மான் உடனே துள்ளிக் குதித்துவேறு திசையை நோக்கி ஓட்டம்பிடித்தது.

செத்துப்போன மானின் ஆத்மாவை நோக்கி, "உனக்கு அடுத்த பிறப்பு எங்கே வேண்டும்?" என்று தேவாதிதேவன் கேட்டான். ஸ்வர்க்கத்து நட்பின் ஞாபகம் லேசாக அதன் மனத்தை மலர்வித்தது. தன்னைப் பின்னுக்கு இழுத்த வேறோர் எண்ணத்தை அடக்கிவிட்டு, "அந்த என் மற்றொரு நண்பனும் வரட்டும். பிறகு எங்களிருவரையும் ஒரே இடத்தில் - அக்கம் பக்கத்தில் - வாழும்படி பிறப்பியுங்கள்" என்று பதில் சொல்லியது.

* * * *

அவை இரண்டும் ஒரு ராணியின் வயிற்றில் இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்தன. சிறுவயசில், அந்த ராஜகுமாரர்கள் இருவருடைய பெருமையிலும் சிறிதும் வித்தியாசம் தோன்றவில்லை. தேவலோகத்தைப் போலவே, இங்கும் தமது அன்பு குன்றாமலிருக்கும் என்று அவர்கள் நினைத்தனர்.

குமாரர்கள் வளர்ந்து பெரியவர்கள் ஆயினர். இருவரில் எவனை இளவரசனாக்குவது என்ற பிரச்னை எழுந்தது. தர்ம சாஸ்திரங்களின் தீர்ப்பு ஒரு புறம், அரசனுடைய தீர்ப்பு வேறு புறம், ஜனங்களுடைய தீர்ப்போ - ஆனால், ஜனங்களின் தீர்ப்பைக் கேட்பவர் யார்?

சேனாதிபதியின் பெண், பேரழகு வாய்ந்தவள், அடிக்கடி அரண்மனைக்கு வந்துபோவாள். ராஜகுமாரர்கள் இருவரும் தம் மனத்தை அவளுக்குப்

பறி கொடுத்தனர். எவன் இளவரசனுகிருனே, அவன் தான் அவளை மணந்துகொள்ள முடியும் என்று சில நாளைக்கெல்லாம் இருவருக்கும் தெரிந்தது.

ஒரு நாள் காலையில் அரசகுமாரர்கள் இருவரும் வேட்டையாடக் காட்டுக்குப் போயினர். அரண் மனையிலிருந்து புறப்படும்பொழுதே, அவர்கள் ஒரு வரை ஒருவர் குரூரமாகப் பார்த்துக்கொண்டார் கள். இருவரும் ஒருவர் மற்றவரைப் பார்த்துக் கம்மிய குரலில், "இன்று நமக்குப் பெரிய வேட்டை கிடைக்கும்" என்று சொல்லிக்கொண்டார்கள்.

மாலையில் இரண்டு ராஜகுமாரர்களின் பிணங் கள் அரண்மனைக்குக் கொண்டுவரப்பட்டன. இருண்ட அடர்ந்த புதருக்குள் பதுங்கியிருந்தமையால் அருகில் ஏதோ காட்டு மிருகம் இருக்கிறது என்று எண்ணி, இருவரும் ஒரே சமயத்தில் அம்பு எய்தன ராம்! இரண்டு அம்புகளும் குறி தவருமல் பாய்ந்தன!

* * *

தேவாதிதேவன் அவ்விரண்டு ஆத்மாக்களையும் நோக்கி, "உங்களுக்கு அடுத்த பிறப்பு எங்கே வேண்டும்?" என்று கேட்டான்.

இருவரும் ஒரே சமயத்தில், "எங்கே இருந்தா லும் சரி; ஆனுல் ஒருவரை விட்டு மற்றவர் தொலை வில் - வெகு தொலைவில் - இருக்க வேண்டும்!" என்று கூவினுர்கள்.

## ஆகாயமும் பூமியும்

ஆகாயம் பூமியை எப்போதும் துச்சமாக மதிப்பது வழக்கம். அருணோதயத்தின் செம்மையைக் காண்பித்து, "இது காதலின் நிறம். உன்னிடம் இது எங்கிருந்து இருக்கப்போகிறது?" என்று அது பூமியைக் கேட்கும்.

பலவித நிறங்கள் கலந்த சாயங்கால மேகத்தைக் காண்பித்து, "இதோ பார், என் விளையாட்டுப் பொம்மைகள். உன்னிடம் இப்படிப்பட்ட பொம்மைகள் இருக்கின்றனவா?" என்று கேட்கும்.

இரவில் பிரகாசிக்கும் நக்ஷத்திரங்களைப் பற்றியோ அதற்கு மகா கர்வம். "உன் பூக்கள் இன்று மலர்ந்து நாளைக்கு வாடிப்போகின்றனவே! இதோ பார் என் பூக்களை! இவை யுகக்கணக்காக மலர்ந்தவாறே இருக்கின்றன" என்று அது பூமியைப் பரிகாசம் செய்யும்.

பூமி சாது. ஆகாயம் என்பது வெறும் தோற்றம் என்று அதற்குத் தெரியாது. தென்படுவதுபோலத் தான் ஆகாயம் உண்மையில் இருக்கிறது என்பது அதன் நினைப்பு. தன்னிடமிருந்து நீரைக் கொள்ளையடித்து ஆகாயம் மேகங்களை உண்டாக்குவதையும், அவற்றைக்கொண்டு விளையாட்டுப் பொம்மைகள் ஆக்குவதையும், இந்தக் கடன் வாங்கிய நீரைத் திருப்பிக் கொடுக்கும்போது அது நன்றிகெட்டு வசைமொழிகளைக் கடகடவென்று முழக்கி, மின்னலாகிய சாட்டையை வீசுவதையும் பூமி நினைத்துக்கூடப்

பார்க்கவில்லை. ஆகாயம் தண்ணீர் கொடுத்துத் தனக்கு உபகாரம் செய்ததாகவே அது நினைத்தது.

சோம்பேறியும், சுகாநுபவியும், நன்றி கெட்டது மான ஆகாயத்தைக் கண்டு நக்ஷத்திரங்களுக்கெல் லாம் கோபம் வந்தது. அவை கோபத்தோடு, "நிற நிறமான மேக உடைகளையும், அருணனாகிய கள்ளை யும் தவிர்த்து இந்த ஆகாயத்துக்கு வேறு ஒன்றுமே தெரிவதில்லை. அந்தப் பூமியும் இருக்கிறது, பாருங் கள் ! வயிற்றில் நெருப்புப் பற்றிக்கொண்டு எரிந்தால் கூட ஆகாயத்துக்கு வேண்டிய மட்டும் தண்ணீர் கொடுக்கிறது. தன் இருதயத்தில் அடிபட்டால்கூடத் தன் முதுகிலுள்ள பிராணிகளை அன்னையைப்போல அன்போடு பராமரிக்கிறது. நீங்கள் அதனிடம் ஓர் இனிய பேச்சுப் பேசுங்கள். உடனே அது பதிலுக்கு நூறு இனிய சொற்களை உங்களிடம் பேசுகிறது. அப்படிப்பட்ட பூமியை விட்டு இந்த ஆகாயத்தில் ஒட்டிக்கொண்டு இருப்பதால் பிரயோஜனம் என்ன ? வாருங்கள், போவோம். இந்த ஆகாயத்தில் நக்ஷத்தி ரங்களாக இருப்பதைவிட, பூமியில் போய்க் கற்க ளாக இருப்பது எவ்வளவோ மேலானது" என்றன.

ஒரு நக்ஷத்திரம் அறுந்தது. ஓர் உற்கை விழுந்தது.

மற்றொரு நக்ஷத்திரம் அறுந்தது. மற்றோர் உற்கை விழுந்தது.

பரபரவென்று நக்ஷத்திரங்கள் கீழே விழலாயின. பொடி சூர்ணமாகும்பொழுதுகூட அவை சிரித்துக் கொண்டே இருந்தன. நக்ஷத்திரங்கள் யாவும் விழுந்துவிடவே, ஆகாயத்தின் சௌந்தரியம் அழிந் தது. அதற்குப் பைத்தியம் பிடித்தது. அந்தப் பைத்திய வேகத்தில் அதுவும் கீழே குதித்தது.

ஆகாயம் இடிந்து விழுந்தது!

அது இடிநது விழுந்ததனால் யாருக்கும் ஒரு நஷ்டமும் உண்டாகவில்லை. அதற்கு மாறாக, பூமிக்கும் ஸ்வர்க்கத்துக்கும் இடையே மறைத்துக்கொண்டு இருந்த திரை இல்லாதொழிந்தது.

இந்தப் புரட்சியைச் செய்தது எது?

அந்த முதல் எரி நக்ஷத்திரம்!

## பக்கத்து வீட்டுக்காரன்

எவ்வளவு அழகிய குளம் அது! ஆகாயத்து மேக மாலைகள் வரும்போதும் போகும்போதும் தம் முடைய சிங்கார அழகுகளைப் பார்ப்பதற்காகப் பூமியில் பதித்துவைத்திருக்கும் உயர்ந்த நிலைக்கண்ணாடியோ அது என்று தோற்றியது.

அந்தக் குளத்தின் கரையில் ஓர் அழகிய புதரும் இருந்தது. வட்டமான, ஓரத்தில் பட்டை தீட்டிய நிலைக் கண்ணாடிக்குப் பொருத்திய, சித்திர வேலைகள் செய்த சட்டமோ என்று அது தோற்றியது.

குளத்தில் மீன்கள் ஆனந்தமாகத் துள்ளும். புதரில் பறவைகள் உல்லாசமாகப் பாடும்.

தற்செயலாக ஒரு மீனுக்கும் ஒரு பறவைக்கும் பழக்கம் ஏற்பட்டது.

"குளத்துக்குள்ளே நீந்தும்போது மிகவும் ஆனந்தமாக இருக்கும் அல்லவா?" என்று பறவை மீனைக் கேட்டது.

யாருக்குத்தான் அகந்தை இல்லை? மீன் குளத்துக்குள்ளே இருக்கும் அற்புதங்களை வர்ணித்தது. அந்த வர்ணனை முடிந்ததும், "ஆகாயத்தில் பறப்பது வெகு வேடிக்கையாக இருக்கும் அல்லவா?" என்று கேட்டது.

பறவை ஒரு மகாகவியைப்போல ஆகாய யாத்திரையை வர்ணித்தது. மீன் மனத்துக்குள்ளேயே தவித்துப் புழுங்கியது.

சீக்கிரமே அவை இரண்டுக்கும் குளக்கரையில்

சந்திப்பு ஏற்பட்டது. மீன் நீரை விட்டு வெளியே வந்துகொண்டிருந்தது. பறவை தண்ணீரில் இறங்கிக் கொண்டிருந்தது.

மரத்தின்மேல் ஏறி, அப்புறம் ஆகாயத்திலே பறக்கவேண்டும் என்பது மீனின் ஆசை.

ஆனால் அது மரம் வரையில்கூடப் போகவில்லை. குளக்கரைமீதே துடிதுடித்து இறந்தது.

பறவையும் குளத்தினுள்ளே செல்லவில்லை. தாமரைக் கொடிவலையில் அதன் கால்கள் சிக்குண்டன. நட்ட நடுவிலேயே அது மூச்சடைத்துச் செத்துப்போயிற்று.

அன்று குளக்கரையில் இருந்த பறவைகள், "இந்தப் புதரின் அருகில் உள்ள குளம் மிகவும் நல்லது, அப்பனே! இந்த மாதிரியே நமக்கு அடிக்கடி மீன்கள் தின்னக் கிடைக்கும்!" என்று தமக்குள் பேசிக் கொண்டிருந்தன.

குளத்துக்குள்ளே இருந்த மீன்கள், "நம்முடைய குளத்தினருகே உள்ள புதர் மிகவும் நல்லதப்பா! இந்த மாதிரியே நமக்கு அடிக்கடி பறவைகள் தின்னக் கிடைக்கும்!" என்று பேசின.

# கனவுகள்

ஒருவர் கழுத்தில் மற்றவர் கை மண்டலமிட்டிருந்தது. அவ்விருவரின் மூச்சுக் காற்றும் ஒருருவமாகியிருந்தது. ஆயினும், அவர்கள் மனமோ?

அவன் கனவிலே பார்த்துக்கொண் டிருந்தான்:

அவனுடைய சோலை ஒன்று. அதில் எங்கே பார்த்தாலும் அரும்பு மயம். மலர்ந்த பூ ஒன்றுகூட இல்லை. அந்த அரும்புகள் யாவும் பூத்ததும், அவற்றின் 'கும்' என்ற நறுமணத்தில் ஈடுபட்டு உலகமெல்லாம் தன் சோலையை நோக்கி ஓடிவரும் என்பதில் அவனுக்குச் சந்தேகமே இருக்கவில்லை.

ஒரு மங்கைநல்லாள் அந்தச் சோலையில் நுழைந்தாள் 'யாருடைய அநுமதியினால் நீங்கள் உள்ளே வந்தீர்கள்?' என்ற கேள்வி அவன் உதடுவரையிலும் வந்துவிட்டது. ஆனால், ஓர் இளைஞன் அழகியைப் பார்த்து இவ்விதம் அதிகப்பிரசங்கித்தனமான கேள்வியைக் கேட்க முடியுமா?

அந்த மங்கை சோலையில் உலாவ ஆரம்பித்தாள். தன் கூந்தலை அலங்கரித்துக்கொள்ள அவள் நிரம்ப அரும்புகளைக் கிள்ளினாள். 'என்னதான் கிள்ளினாலும் இவள் எத்தனை அரும்புகள் பறித்துவிடப் போகிறாள்?' என்று அவன் நினைத்தான். அவளுடைய அழகிய முகத்தை ஆசையோடு பார்த்துக்கொண்டு அவன் சும்மா உட்கார்ந்திருந்தான்.

ஒரு நிமிஷத்தில் அவளைச் சுற்றிக் குழந்தைகள் கூடிவிட்டன. அந்தக் குழந்தைகளை அவள் எங்கிருந்து

தான் அழைத்து வந்தாளோ! அந்தக் குழந்தைக ளெல்லாம் சேர்ந்து சோலையில் இருந்த அரும்புகளைச் சின்னபின்னமாக்கிவிட்டன.

அவளிடம் அவனுக்குப் பிரமாதமான கோபம் வந்தது. 'எங்கிருந்தாவது விஷத்தைக் கொணர்ந்து அவளைக் குடிக்கச் செய்யவேண்டும்' என்று தோன் றிற்று.

அதே க்ஷணத்தில், அவளுடைய கனவிலும் அவள் ஒருவன்மீது இப்படித்தான் எரிச்சல் கொண்டிருந் தாள். 'எங்கிருந்தாவது விஷத்தைக் கொணர்ந்து அவனைக் குடிக்கச் செய்யவேண்டும்' என்ற எண்ணம் அவள் மனத்திலும் தோன்றிற்று. அதற்குத் தகுந்த காரணமும் இருந்தது.

தன் கோயிலில், உலகத்தைப் பைத்தியமாக்கும் படியான ரதியின் பிரதிமையை உருவாக்குவதில் அவள் முனைந்திருந்தாள். அதற்குள் எவனோ ஒருவன் அவளருகில் வந்தான். எவ்வளவு அழகாக இருந்தான் அவன்! 'யாருடைய உத்தரவினால் நீங்கள் உள்ளே வந்தீர்கள்?' என்ற கேள்வி அவள் உதட்டில் முட்டி யது. ஆனால், ஓர் இளமங்கை அழகனைக் கண்டு இவ் விதம் அதிகப்பிரசங்கித்தனமான கேள்வியைக் கேட்க முடியுமா?

கீழே கிடந்த சுத்தியை எடுத்து அவன் அந்த ரதிபிம்பத்தைக் குரூபமாக்குவதை அவள் முதலில் கவனிக்கவில்லை. பிறகு அந்தச் செயலைக் கண்டதும் அவன் மீது அவளுக்கு அளவற்ற கோபம் வந்தது. ஆனால் அவனுடைய அழகைப் பார்த்த வுடனே அந்தக் கோபம் எங்கோ மறைந்து போயிற்று.

ஒரு நிமிஷத்தில் அந்தப் பிரதிமையைச் சுற்றிக்

குழந்தைகளும் கூடிவிட்டன. அவன் அந்தக் குழந்தைகளை எங்கிருந்துதான் அழைத்து வந்தானோ! ஒவ்வொரு குழந்தையும் அந்தச் சுத்தியை எடுத்து, ஏற்கனவே சின்னபின்னமான அந்த ரதிபிம்பத்தைப் பின்னும் சிதைத்தது. அந்த ஆளிடம் அவளுக்கு இப்போது உண்டான கோபம் இவ்வளவு அவ்வளவு அல்ல. எங்கிருந்தாவது விஷத்தைக் கொணர்ந்து அவனைக் குடிக்கச் செய்யவேண்டும் என்று அவளுக்குத் தோன்றிற்று.

அவனுடைய கனவைப்போலவே அவள் கனவும் இந்த இடத்திலேயே அரைகுறையாக நின்றது. அவள் உடல் முழுவதும் கிடுகிடென்று நடுங்குவதைக் கண்டு, "ஏன் இப்படி நடுங்குகிறாய்? கனவிலே எதையாவது பார்த்தாயா?" என்று அவன் கேட்டான்.

"உங்களுக்கு யாரோ விஷமிடுவதை—." மேலே அவளால் பேச முடியவில்லை. பயத்தினால் அவள் அவனைச் சேர்த்துக் கட்டிக்கொண்டாள்.

"நானும் அப்படித்தான் ஒரு கனவு கண்டேன். யாரோ உனக்கு விஷமிடுவதை—. போடி பயங்கொள்ளி! உனக்கும் எனக்கும் யாராவது விஷமிட்டதனாலேயே நாம் செத்துப் போய்விடுவோமா என்ன?" என்றான் அவன்.

அவன் பேச்சிலே இருந்த குறிப்பை அவள் அறிந்துகொள்ளவில்லை. ஆனால் புன்னகையோடு பேசிய அவன் சொற்களைக் கேட்டு அவளுடைய பயம் மட்டும் மறைந்து போயிற்று.

"நம்மிடந்தான் அமிருதம் இருக்கிறதே!" என்றான் அவன், சிரித்துக்கொண்டே.

'எங்கே?' என்று அவள் கண்களால் கேட்டாள். அவன் அந்தக் கேள்விக்கு இதழ்களால் பதில் சொன்னான்.

அந்தச் சின்னஞ்சிறு அமுதக் கிண்ணத்திலே, அந்த விஷக் கனவுகள் மட்டுமல்ல, அவர்களுடைய துன்பங்கள் யாவுமே மூழ்கி அமிழ்ந்து மறைந்தன.

# கெட்டிக்கார ஆடு

குன்றின் பாதையிலே நடுவில் ஒரு பள்ளம். அக்கம் பக்கத்திலுள்ள பசிய இலைகளை நோக்கிக் கொண்டே செல்லும் ஆடுகள் அதை எவ்வாறு கவனிக்கும்?

எல்லாவற்றிற்கும் முன்னே சென்ற ஆடு, கால் தவறிப் பள்ளத்தில் விழுந்தது. 'இந்தப் பள்ளத்தில் ஏதோ ஒரு விசேஷம் இருக்கவேண்டும். நாம் முன்பின் பாராமல் இதில் விழுவதே சரி' என்று நினைத்தன அதன் பின்னே வந்த ஆடுகள்.

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து...பள்ளம் நிரம்பிக்கொண்டே வந்தது. கடைசி ஆடு ஓடிவந்தது; ஆனால் பள்ளம் நிறைந்துவிட்டபடியால், அது மறறுமுள்ள ஆடுகளின்மீது விழுந்து புரண்டுகொண்டே, பள்ளத்தைக் கடந்து அப்புறம் சென்றது. பின்னால் திரும்பி மற்ற ஆடுகளை நோக்கி, "மூடர்களே! வழியிலுள்ள பள்ளங் கூடவா உங்கள் கண்ணில் படவில்லை?" என்று அது கேட்டது.

தானே தெய்வம் என்ற எண்ணம் அந்தக் கல்லுக்கு. ஆனால் உலகத்திலே ஏதாவது ஓர் அதிசயச் செயலைச் செய்தாலொழிய ஜனங்கள் வணங்கமாட்டார்கள்; வழிபாடு இல்லை என்றால் தெய்வத் தன்மை ஏது?

அது என்றும் வெயிலிலே மினுக்கவில்லை; நிலவிலே பளபளக்கவில்லை.

ஜோவென்று அடைமழை கொட்டினாலும் சரி, எலுமிச்சம் பழங்களைப் போன்ற பனிக்கட்டிகள் பொழிந்தாலும் சரி, அதன் மௌன விரதம் எப்போதும் கலையவில்லை.

அக்கம்பக்கத்திலுள்ள கூரிய கற்கள், "சுத்த எருமை மாடடா நீ!" என்று அதை நையாண்டி செய்யும்.

யாரோ கவணால் எறிந்த கல் ஒன்று விர்ரென்று அதன் பக்கத்திலேயே பாய்ந்து சென்றது; ஆனால் அது தன் இடத்தை விட்டுச் சிறிதும் அசையவில்லை.

சந்திரகாந்தக் கல் உருகுவதை அது ஒரு தடவை பார்த்தது. ஆனால் தான் மட்டும் ஒரு க்ஷணங்கூட உருகவில்லை.

கவாயத்துப் பழகும் சிப்பாயைப்போல, கால புருஷன் முன்னால் அடிவைத்துச் சென்றுகொண்டே இருந்தான்.

*　　*　　*

ஒரு நாள் சில கைதிகள் அவ்வழியே போய்க் கொண்டிருந்தார்கள். வெயில் தழல்போல எறித்துக் கொண்டிருந்தது. அவர்கள் இளைப்பாறுவதற்காக அந்தக் கல்லின் அருகே மரநிழலில் உட்கார்ந்தார்கள். ஒரு கைதி பாடவும் ஆரம்பித்துவிட்டான். அந்தப் பாட்டுக்கு ராகமா தாளமா, எதுவும் இல்லை. ஆயினும் அதைக் கேட்டு எல்லாக் கைதிகளும் ஆனந்தத்தில் மூழ்கினர். அவர்களைக் காத்து வந்த சிப்பா யும் தன்னை மறந்து அந்தப் பாட்டில் லயித்து விட்டான்.

அது ஒரு காதற் பாட்டு. "தோழி, நான் முன்பு இரும்பாக இருந்தேன்; ஆனால் உன் ஸ்பரிசம் பட்ட வுடனே என் வாழ்க்கை பொன்னாகிவிட்டது" என்கி றான் காதலன்.

பாட்டைக் கேட்கும் ஜோரிலே, ஒரு கைதி தன் கையில் இருந்த மண்வெட்டியை லேசாக மேலே தூக்கித் தரையில் மெதுவாக வீசினான். 'கண்' என்ற ஓசை கேட்டது. அதைக் கேட்டு யாவரும் அந்தப் பக்கம் பார்த்தபோது, அந்த மண்வெட்டி மஞ்சளாகத் தென்பட்டது! முதலில் ஒருவன், பிறகு இரண்டாமவன், மூன்றாவது ஆசாமி - இப்படியாக ஒவ்வொருவனும் தன் மண்வெட்டியை அந்தக் கல் லிலே படும்படி வைத்தான். ஒவ்வொரு மண்வெட்டி யும் பொன்னாயிற்று. "தெய்வம்! தெய்வம்!" என்று எல்லாக் கைதிகளும் ஆனந்தத்தினால் கூச்சலிட்டனர்.

இரும்பைப் பொன்னாக்கும் அந்த ரஸகுளிகை யைப் பெறுவதற்காக ஒவ்வொரு கைதியும் போராட ஆரம்பித்தான். அரைமணி நேரத்துக்கு முன்பு இசை விருந்து நடந்துகொண்டிருந்த இடத்தில் இப்போது

அலறும் சப்தம் காதில் விழுந்தது. அந்தக் கைதிகள் யாவரும் தமக்குள் ஒருத்தன் தலையை இன்னொருவன் மண்வெட்டியால் பிளக்கும்வரைக்கும் சண்டையிட்டு, மரணத்தை எதிர்பார்த்தவர்களாய்த் தரையிலே சாய்ந்து கிடந்தனர். சிப்பாய் அந்தக் கல்லை மெது வாக எடுத்துத் தன் பையிலே போட்டுக்கொண்டான்.

* * *

சிப்பாயின் மனைவி அரிவாளை அந்தக் கல்லிலே உரைத்துப் பார்க்கவேண்டும் என்று ஆசைப்பட்டாள்; அந்த ஆசையை அவளால் அடக்க முடிய வில்லை.

பொன் அரிவாளை வீட்டிலே வைத்துக்கொண்டு என்ன செய்வது? சிப்பாய் அதைப் பொன் வாணிக னிடம் எடுத்துக்கொண்டு போனான்.

ஒவ்வொரு வியாபாரியும் அந்தப் பொன்னின் மாற்றைப் பார்த்தான். அசல் பத்தரை மாற்றுத் தங்கம்! ஆயினும், ஒவ்வொருவனுக்கும் மனத்தில் சந்தேகம் உதித்தது: 'குபேரனுடைய வீட்டிலே கூடப் பொன் அரிவாள் இராதே! அப்படி இருக்க, இந்த நாடோடிச் சிப்பாயிடம் அது எப்படி வந் தது?' என்று.

ஒவ்வொருவனும் அந்தப் பொன் அரிவாளை இரும்பின் விலைக்குக் கேட்க ஆரம்பித்தான். சிப் பாய்க்குக் கோபம் வந்துவிட்டது. கடைசியில் ஒரு வியாபாரி போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டரை அழைத்து வந்தான். அரிவாளைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு எடுத்துப்போனார்கள்; சிப்பாயை அறைக்குள்ளே அடைத்து வைத்தார்கள்.

பளார் - பளீர் - பளார் !

சாட்டையால் அடித்தார்கள் ; ஆனால் சிப்பாய் சிரித்துக்கொண்டிருந்தான். முதுகுத் தோல் உரிந்து மாமிசம் சக்கை சக்கையாகத் தொங்கியது ; ஆனால் அவன் ஊசி போட்டுத் தைத்தாற்போலத் தன் வாயைத் திறக்கவே இல்லை.

அவனுடைய மனைவியை அவன் முன்னால் கொண்டுவந்து நிறுத்தினார்கள். மீண்டும் சாட்டையடி தொடங்கியது.

ரத்தத்திலே தோய்ந்த சதைத் துணுக்குகள் இங்கும் அங்கும் பறந்தன. அந்த அம்மாளின் உறுதியும் பறந்தது. மடியிலே கட்டியிருந்த கல்லை ஸப் இன்ஸ்பெக்டரை நோக்கிச் சுழற்றி எறிந்துவிட்டு, " இந்தாருங்கள் அந்தப் பூதம் ! என் கணவரை விடுவியுங்கள் !" என்று கூவினாள்.

அவளுடைய முட்டாள்தனத்தை நினைந்து ரஸகுளிகை மனத்துக்குள்ளேயே சிரித்தது. தெய்வத்தை யாராவது பூதம் என்று சொல்வார்களா ?

அவள் வீசி எறிந்த கல் ஸப் இன்ஸ்பெக்டரின் மண்டையில் பட்டது. தலையிலிருந்து ரத்தம் பெருகுவதைப் பொருட்படுத்தாமலே, அவன் சட்டைப் பையிலிருந்து சாவிக்கொத்தை எடுத்தான். ஒவ்வொரு சாவியையும் அந்தக் கல்லில் தேய்த்ததுமே பொன்னாயிற்று. தலையிலே பட்ட காயத்தைப்பற்றி அவனுக்கு நினைவே இல்லை !

ஸப் இன்ஸ்பெக்டரின் வீட்டில் அவனுடைய தம்பிகள் இருவர் இருந்தனர்.

முதல் தம்பி ரஸகுளிகையை எடுத்து, இரும்

பாலாகிய ஒவ்வொரு வஸ்துவின்மீதும் தேய்த்தான். ஆணிகள் பொன்ஞயின; ஜன்னல் கம்பிகள் பொன்ஞயின; பூட்டுக்கள் பொன்ஞயின. ஸப் இன்ஸ்பெக்டரின் வீடு குபேரநகரத்துப் பொன்வீடு ஆயிற்று! தன் வீட்டுப் பொற்கதவைப் பெருமிதத்தோடு பார்த்துக்கொண்டே, 'வீட்டிலுள்ள எல்லாப் பொருள்களும் பொன்ஞயின. இனி இந்த ரஸகுளிகையால் என்ன உபயோகம்? அடடா! என் உடலும் இரும்பாக இருந்திருந்தால், எவ்வளவு நன்ருக இருக்கும்! இந்தக் குளிகையைத் தேய்த்து அதையும் நான் பொன்ஞக்கிவிட்டிருப்பேனே!' என்று அந்தத் தம்பி யோசிக்கலாஞன். வீட்டில் பொன்ஞக்கக்கூடிய பொருள் வேறு ஏதும் இல்லையே என்று அவன் வருத்தமுற்ருன். அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது!

மற்ெருரு தம்பியின் மனைவிக்கு வேறு எண்ணம் உண்டாயிற்று. 'வீட்டிலுள்ள எல்லாப் பொருள்களும் பொன்ஞயின. இருந்தாலும், ரஸகுளிகை மூத்த மைத்துனனுடைய வசத்தில் இருப்பதஞல், ஜனங்கள் என் கணவனைவிட அவனுக்குத்தான் என்ன ஆஞலும் அதிக மரியாதை கொடுப்பார்கள்' என்று அவள் எண்ணிஞள்.

பொருமையிஞல் அவள் தவியாகத் தவித்தாள். ஒரு நாள், மூத்த மைத்துனனுக்குக் கொடுத்த பாலில் மெதுவாக விஷம் கலந்துவிட்டாள். மறுநாள், அவள் மூத்த மைத்துனனைக் கொலை செய்தாள் என்ற வழக்கின் விசாரணையைக் கேட்பதற்காகக் கோர்ட்டில் அசாத்தியமான கும்பல் கூடிவிட்டது.

நியாயாதிபதியின் முன்பு, எல்லோருக்கும்

எளிதிலே தென்படும்படி ஒரு சிறு கல் ஏன் வைத்திருக்கிறது என்பது யாருக்கும் புரியவில்லை.

ஸப் இன்ஸ்பெக்டரின் தம்பிமனைவி, தான் விஷமிட்டதை ஒப்புக்கொண்டாள்.

"இந்தச் செயலில் உனக்கு உதவி செய்தது யார்?" என்று நியாயாதிபதி கேட்டார். அவள் அந்தக் கல்லைச் சுட்டிக் காட்டினாள். அவர் வியந்தார். அவள் அழுதுகொண்டே அந்தக் கல்லின் வரலாற்றைக் கூறினாள்.

அந்தக் கல் பட்டவுடனே இரும்பு பொன்னாகிறது!

'ஒரு நிமிஷமாவது அந்தக் கல் நமக்குக் கிடைக்காதா!' என்ற எண்ணம் அங்கே கூடியிருந்த ஒவ்வொருவர் மனத்திலும் தோன்றிற்று.

நியாயாதிபதி திவ்ய திருஷ்டி வாய்ந்தவர் என்று எல்லோருக்கும் நம்பிக்கை உண்டு. அவர் என்ன தீர்ப்புச் செய்கிறாரோ என்பதிலேயே ஒவ்வொருவர் கவனமும் இருந்தது.

ரஸகுளிகையை ஆசையோடு பார்த்துக்கொண்டே, "கல்லுருவத்திலே உலகில் தெய்வம் நடமாடுவது வழக்கம். இந்தத் தெய்வத்தை நான் என் வீட்டிலேயே வைத்துப் பூஜை செய்கிறேன்" என்றார் நியாயாதிபதி.

"நான் கல் அல்ல; நான் தெய்வம் அல்ல; நான் ராக்ஷஸன்!" என்று கூவியது ரஸகுளிகை.

## கூடும் பூகம்பமும்

மிகப் பழங்காலத்து மரம் அது !

சமீபத்தில்தான் பறக்க ஆரம்பித்திருந்த அந்தக் குருவிக்குஞ்சின் முன்னோர், தொல்பெருங்காலமாக, வாழையடி வாழையாக, அந்த மரத்திலேதான் கூடு கட்டி வாழ்ந்துவந்திருக்கின்றனர்.

அந்த மரம் எத்தனையோ சூறாவளிகளுக்கு ஈடு கொடுத்திருக்கிறது ; எத்தனையோ புயல்களைப் பார்த்திருக்கிறது. அத்தனை பேராபத்துக்களிலும் அதில் கட்டியிருந்த ஒரு கூடாவது கீழே சிதைந்து விழுந்ததில்லை.

ஆனால் ஒரு நாள் திடீரென்று அந்த மரம் 'கிடு கிடு'வென்று நடுங்க ஆரம்பித்தது.

'வெளியே புயல் வீச ஆரம்பித்திருக்கும்' என்று அந்தக் குருவிக்குஞ்சின் தாய் எண்ணியது.

குஞ்சு வெளியே தலை நீட்டிப் பார்த்தது; ஆகாயம் மேகமற்று நிர்மலமாக இருந்தது !

தாய், குஞ்சை உள்ளே இழுத்து, "ஏதாவது சூறைக் காற்றாக இருக்கும் ; நீ பேசாமல் தூங்கு" என்றது.

தாயின் ஸ்பரிசத்தினால் உண்டாகும் இனிய ஆனந்தம் இன்று அந்தக் குஞ்சுக்கு வேண்டியிருக்கவில்லை.

அது அடிக்கடி வெளியே தலையை நீட்டிப் பார்த்தது.

மரங்கள் பின்னும் அதிகமாக ஆட ஆரம்பித்தன. அவை பூமித்தாய்க்குப் பெரிய சாமரங்கள் வீசுவது போலத் தோற்றின.

குருவிக் குஞ்சு பார்த்தது: புயலுக்கு ஆதாரமான அடையாளம் எதுவும் தென்படவில்லை.

பார்த்துக்கொண்டே இருக்கையில் அக்கம் பக்கத்து வீடுகள் தடதடவென்று சரிந்தன. பிறகு கோயில்கள், அரண்மனைகள்—

தட—தட—தட—தட—

"அம்மா, அம்மா! அம்மா! ஐயோ அம்மா!"

அந்தப் பயங்கரக் கூக்குரலைக் கேட்டு, குருவிக் குஞ்சு தன் தாயைக் கூட்டுக்கு வெளியே இழுக்க ஆரம்பித்தது.

தாய் அதற்கு மாறாக அதைக் கூட்டுக்குள்ளே இழுத்தது.

"அம்மா, இது சுழல்காற்று அல்ல, புயல் அல்ல; இது பூகம்பம்!" என்றது குருவிக்குஞ்சு.

"குழந்தாய், நம்முடைய இந்த மரம் மிகப் பழங்காலத்தது. இப்படிப்பட்ட எத்தனையோ பூகம்பங்களை அது பார்த்திருக்கிறது!" என்று பேசியது தாய்.

கூட்டின் வாசலில், ஒன்றன் மீது மற்றொன்று உயிரை வைத்திருக்கும் அவ்விரண்டு ஜீவன்களும் வாதாட ஆரம்பித்தன.

"குழந்தாய், பூகம்பம் பூகம்பம் என்று ஏன் உளறிக்கொட்டுகிறாய்? வெளியே பெரும் பிரளயம் ஆரம்பமாகி யிருக்கிறது. கூட்டுக்குள்ளே ஒட்டிக்கொண்டு இருந்தால்தான் நம் உயிர் மிஞ்சும். மிகப் பழங்காலத்து வைரம் பாய்ந்த மரம் இது!" என்று தாய் சொல்லியது.

"அம்மா, பூகம்பத்தைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது! கூட்டை விட்டு வெளியே போனால்தான் நம் உயிர் பிழைக்கும். இனி இந்தப் பழங்கால மரத்தை நம்பிப் பயன் இல்லை!" என்று குஞ்சு பதில் சொல்லியது.

குஞ்சு, தாயை அநேகமாகக் கூட்டுக்கு வெளியே இழுத்து வந்துவிட்டது. அதற்குள் தாய், குஞ்சை வெளியே பிடித்துத் தள்ளிவிட்டு, கோபத்தோடு உள்ளே போயிற்று.

தாய் தள்ளிய வேகத்தில், குஞ்சு கூட்டுக்கு வெளியே போய்ப் பறந்தது.

காதைச் செவிடுபடுத்தும் மிகப் பெரும் சத்த மொன்று கிளம்பியது. கடகட—சடசட—கடகட—சடசட—அந்தப் பழங்காலத்து மரம் வேரோடு பெயர்ந்து தரையில் சாய்ந்து கிடந்தது!

அந்தக் குருவிக்குஞ்சு தாயைத் தேடுவதற்காக மரத்தைச் சுற்றி வட்டமிடலாயிற்று.

# மலர்ச்சி

ளகளவென்று தண்ணீர் பெருக ஆரம்பித்தது. பாடகன் தன் கண்டத்திலிருந்து வெளிவரும் இன்னிசையில் சொக்கிப்போவதுபோல, அந்தக் கள களவொலியைக் கேட்டு மலையரசன் சமாதியில் ஆழ்ந்தான்.

ஆனால் அவனுடைய சமாதி நெடு நேரம் நிலைத்து நிற்கவில்லை.

தாயின் மடியிலுள்ள பெண்குழந்தையின் கால் சிலம்பு 'ஜண் ஜண்' என்று ஒலிப்பது போல அது முதலில் அவன் காதுக்குக் கேட்டது. ஆனால் சிறிது நேரம் கழித்து, 'எங்கோ ஒரு நாட்டியக்காரி நர்த்தனமாடிக்கொண்டிருக்கிறாள். நமக்குக் கேட்கும் இந்த ஒலி அவள் கால்களிலுள்ள சிலம்புகளின் ஓசையே!' என்று அவன் நினைத்தான்.

அவன் கண்ணைத் திறந்து பார்த்தான் :

களகளவென்று ஓடிய தண்ணீர் 'கல் கல்' என்று ஒலித்துக்கொண்டு நெடுந்தூரம் போய்க்கொண்டிருந்தது.

நதியைப் பார்த்ததும் மலையரசன், "பெண்ணே!" என்று கூப்பிட்டான்.

நதி பின்னால் திரும்பிப் பார்த்தது. அலைகளின் நுரையா அது? அல்ல ; நதியின் இளமுறுவல்.

"எங்கே போகிறாய்?" என்று பர்வதராஜன் கேட்டான்.

"வெகு தொலைவுக்கு!"

"என்னை விட்டுவிட்டா?"

"ஆமாம். இங்கே இருந்தால் என் வாழ்க்கை மலரவே மலராது!"

* * *

நதி வேகமாக ஓடியது.

அதன் அகலம் மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டே போயிற்று.

சிலர் அதற்குப் பூஜை செய்யலானார்கள்.

சிலர் நிலாவெளிச்சத்தில் ஆற்றுநீரில் படகிலேறி உல்லாசமாக விளையாடினர்.

நதி கர்வத்தோடு மேலே ஓடியது.

ஓடிக்கொண்டே இருக்கையில், தூரத்திலிருந்து தண்ணீரின் களகளச் சத்தம் அதற்குக் கேட்டது. "இது யார் பாடுவது?" என்று அது கரையில் இருந்த மரங்களைக் கேட்டது.

"இது மகாநதி; இனி நீ இந்த மகாநதியோடு கலப்பாய்" என்று மரங்கள் பதில் கூறின.

நதி, தான் நின்ற இடத்திலேயே அசையாமல் நின்று, கோபத்தோடு, "மற்றொரு நதியோடு கலந்தால் என் வாழ்க்கை மலர முடியாது!" என்றது.

மரங்களின்மீது இருந்த பறவைகள், "மகாநதியிலிருந்து நீ கடலில் போய்க் கலப்பாய்!" என்று கூவின.

நதி முகத்தைச் சிணுங்கிக்கொண்டு, "ஹூம்! கடலா! உப்புநீர் கொண்ட அந்தப் பெரிய வெட்டுப் பள்ளம்! அதில் போயா நான் கலப்பேன்? சீ! அங்கே என் வாழ்க்கை மலரவே முடியாதே!" என்றது.

* * *

ஒரு பெரிய திருப்பத்தோடு நதி வேறொரு திசையில் பெருகி ஓடியது.

எவ்வளவு வறண்ட பிரதேசம் அது! உலகத்தில் பசுமை என்று ஒரு நிறம் இருக்கிறது என்பதே அதற்குத் தெரியாது போலும்!

நதியின் களகளவோசையைக் கேட்டவுடனே ஆயிரக் கணக்கான ஜனங்கள் நதிக்கரைக்கு ஓடிவந்தார்கள்.

சிலர், "தேவதரிசனம் கிடைத்துவிட்டது!" என்றார்கள்.

பின்னும் சிலர், "இந்த ஆற்றிலிருந்து கால்வாய்கள் வெட்டினால் இந்தக் கற்களிலிருந்துகூட மலர்கள் மலரும்!" என்று முணுமுணுத்தார்கள்.

கால்வாய்களை வெட்ட ஆரம்பித்தவுடனே ஆற்று நீர் குறையலாயிற்று. நதி கோபத்தோடு, "இப்படிச் செய்தால் என் வாழ்க்கை மலருவது ஏது? அங்கே உங்கள் வயல்கள் செழித்து வளரும்; ஆனால் இங்கே என் கரையின் இரு மருங்கும் நீர் இல்லாமல் வற்றிப் போகுமே!" என்றது.

*　　*　　*

அந்தப் பக்கம் மகாநதி; அதைக் கடந்ததும் கடல்; இந்தப் பக்கம் கால்வாய்களைத் தோண்டும் இந்தக் குடியானவர்கள்!

இவர்கள் எல்லோரையும் ஏமாற்றிவிட்டு நதி ஓட்டமெடுத்தது.

ஆனால் இப்போது அதன் வேகம் குறைந்தது.

அது முன்னால் பார்த்தது: மிகப் பெரிய பாலைவனம் ஒன்று பரந்து கிடந்தது. அது வலது புறமாகப்

பார்த்தது, இடது புறத்தில் பார்த்தது : கடும்புயல் ஒன்று வீசி அடித்துக்கொண்டிருந்தது. சமதரையில் பரபரவென்று மணற்குன்றுகள் எழுந்தன.

எவளோ ஒரு சூனியக்காரி இவை யாவற்றையும் செய்துகொண்டிருக்கிறுள் என்று நதி நினைத்தது. "எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம்! என் மலர்ச்சிதான் வேண்டும்!" என்று அது சத்தமிட்டுக் கூவியது.

பத்துத் திசைகளும் விகட நகை புரிவதாக அதற்குத் தோற்றியது. ஆனுல், ராக்ஷஸச் சிரிப்பா அது? அல்ல ; பிரசண்டமான மணற்புயல்கள்!

* * *

இன்று தீப்பட்டெரியும் அந்தப் பாலைவனத்தின் வழியே போகும் யாத்திரிகர்கள் ஒரு சின்னஞ்சிறு சுனையைக் காண்கிறுர்கள். அந்தச் சுனைக்கு அக்கம் பக்கத்தில் வளர்ந்துள்ள பசுமையைக் கண்டு அவர்களுக்குப் பேரானந்தம் உண்டாகிறது. அந்த இளம் பசுமையை அணுகாமல் எந்த யாத்திரிகனும் மேலே அடியெடுத்து வைப்பதில்லை. பசுமையின் மெல்லிய ஸ்பரிசத்திஞல் அவன் முகத்தில் ஆனந்த ஜோதி மிளிர்ந்தவுடனே அந்தச் சின்னஞ்சிறு சுனையில் சிறிய அலைகள் எழுகின்றன. அவை நகைத்துக்கொண்டே, "மலர்ச்சி!" என்ற ஒரே ஒரு சொல்லை முணுமுணுக்கின்றன.

# இயற்கையும் மனிதனும்

வீட்டின் பின்னுலுள்ள புல்வெளியில் உலாவுவதென்ருலும் குதிப்பதென்ருலும் அவனுக்கு மிகுந்த ஆசை. "அப்பா, புல்லிலே இப்படிக் குதிக்கக்கூடாது !" என்று அவன் தாய் எப்போதும் சொல்லிக்கொண்டே இருப்பாள்.

"ஏன் ?" என்று அவன் அதிகப்பிரசங்கித்தனமாகக் கேட்பான்.

"புல்லிலே பாம்புகள் மறைந்து பதுங்கி இருக்கும்" என்று அவள் பதில் சொல்வாள்.

இப்போதெல்லாம் அவன் புல்வெளியில் விளையாடப் போகும்போது ஒரு தடியை எடுத்துச் செல்வது வழக்கமாயிற்று.

ஒரு நாள் அவன் அந்த மெத்தென்ற பசும் புல் நிலத்தில் குதித்துக்கொண்டே இருக்கையில், சடக்கென்று காலை மேலே தூக்கினுன். பாம்புதான் தீண்டியிருக்கும் என்று நினைத்தான். ஆனுல், காலைத் தூக்கிப் பார்த்ததும், ஒரு பெரிய கண்ணுடித் துணுக்கு காலில் புகுந்துகொண்டிருப்பது தெரிந்தது.

சில நாளைக்கு முன்பு ராந்தல் கண்ணுடி உடைந்ததும், அந்தக் கண்ணுடித் துணுக்குகளைத் தானே ஜன்னல் வழியாக வெளியே புல்லில் வீசி எறிந்ததும் அவன் ஞாபகத்துக்கு வந்தன.

## பூமி எப்படித் தணிந்தது?

மிகப் பழங்காலத்துக் கதை:

உள்ளுக்குள்ளே கொதிக்கும் எரிச்சலைத் தாங்க முடியாமல், ஒரு பரந்த ஒளிவட்டம் வெடித்துச் சுக்கல் சுக்கலாகிவிட்டது.

அந்தச் சுக்கல்களில் ஒன்று பெருந்தொலைவில் போய் விழுந்தது.

அந்தத் துணுக்கிலிருந்து ஒரு புதிய சிருஷ்டியை உண்டாக்கவேண்டும் என்ற ஆசை பிறந்தது கடவுளுக்கு. அவர் அதை எடுத்துத் தண்ணீரில் போட்டார். அதன் வெளிப்பரப்பு தணிந்துபோயிற்று. கடவுள் மிகவும் பிரீதியோடு அதற்குப் 'பூமி' என்று பெயர் வைத்தார்.

"ஏன் இப்படிச் சோர்ந்துபோய் உட்கார்ந்திருக்கிறாய்? சற்றுச் சிரியேன், பார்க்கலாம்" என்று கடவுள் பூமியிடம் சொன்னார்.

"கடவுளே, வலிய வரவழைப்பதனாலே சிரிப்பு வந்துவிடாது. உள்ளத்திலிருந்து மலர்ந்து அது தானாகவே வரவேண்டும். என் உள்ளத்தில் பெரு நெருப்பு எரிந்துகொண்டிருக்கிறது. அது அணைந்தாலொழிய, நான் சிரிப்பதேது?" என்று பூமி பதில் சொல்லியது.

அந்த நெருப்பு, தன்னைப் பொசுக்கியதனால் தானோ என்னவோ, பூமி கிடுகிடென்று நடுங்க

லாயிற்று. அந்தப் பூகம்பத்தைப் பார்த்துக் கடவுளே திகைத்தார்.

வெகு நேரம் யோசனை செய்தபின்பு, "உன் உள்ளத்தில் தகிக்கும் எரிச்சலைத் தணிக்க நான் ஒரு புதிய பிராணியை ஸ்ருஷ்டிக்கிறேன். அவன் பெயர் மனிதன்!" என்று கடவுள் பூமியிடம் சொன்னார்.

* * *

மனிதன் பூமியின் மேற்பரப்பில் விளையாட ஆரம்பித்தான். கல்லும் பாறையும் நிரம்பிய பூமியை மலர்களாலும் கனிகளாலும் அலங்கரிப்பதற்காக அவன் அல்லும் பகலும் உழைக்கலானான்.

மனிதர்களின் உடலிலிருந்து வழிந்த வேர்வை வெள்ளத்தினால் பூமி நனைந்தது. நொடிப்பொழுதில் அதன்மீது பசுமை பூத்தது; கொடிகள் ஒய்யாரமாக அசைந்தாடின; மரங்கள் கிளைகளை உயரப் பரப்பி ஆகாயத்தைத் தொட முயன்றன.

வயல்களெல்லாம் பொற்கதிர்கள் நிரம்பியிருந்தன, அணிகலன்களினால் சிங்காரித்த குழந்தைகளைப் போல.

மாடமாளிகைகள் தம்முடைய ஸௌந்தர்ய வைபவத்தைக் காட்டிக்கொண்டு கம்பீரமாக நின்றன, இளமையிலே கால் வைத்திருக்கும் மோகனாங்கிகளைப்போல!

நகரங்கள் பரபரவென்று விஸ்தாரமடைந்தன, பராக்கிரமசாலிகளின் மனத்திலுள்ள பேராவலைப் போல!

பூமியின் இந்தப் புத்துருவத்தைக் கண்டு, கடவுளுக்கு மனிதனிடம் மிகுந்த பரிவு உண்டாயிற்று.

“இப்பொழுதாவது உன் உள்ளம் குளிர்ந்ததா இல்லையா?” என்று அவர் பூமியைக் கேட்டார்.

பூமி ஒன்றும் பதில் சொல்லவில்லை. மனத்தை எவ்வளவோ அடக்கியுங்கூட, அதன் வாயினின்றும் ‘ஹும்!’ என்று ஒரு பெருமூச்சு வெளி வந்தது.

“எரிமலை வெடித்தது!” என்று மனிதர்கள் சொன்னார்கள்.

கடவுள் கோபமாக, “இந்த விடியாமூஞ்சிப் பூமிக்கு எப்போதும் ஆறுதல் உண்டாகாது. இதன் பொருட்டு நான் ஒரு புது ஜீவனை ஸ்ருஷ்டித்தேன். மந்திரவாதியைப்போல, இதன் முழு உருவத்தையும் அவன் மாற்றிவிட்டான்; தன் உடலிலிருந்து வேர் வையை வடித்து இதற்குப் புதிய அழகைத் தந்தான். இவ்வளவு செய்தும் இதன் முணுமுணுப்பு இன்னும் ஓய்ந்தபாடில்லையே!” என்றார்.

இனிமேல் பூமியோடு ஒரு வார்த்தைகூடப் பேசுவதில்லை என்று அவர் கோபத்தோடு கோபமாக நிச்சயித்துவிட்டார்.

* * *

பூமியின் மீது எல்லாப் பொருள்களும் மேன் மேலும் வளர்ந்துகொண்டே இருந்தன: தனம், தானியம், மாடமாளிகைகள், நகரங்கள், மனிதர்கள்; துன்பங்களுங் கூடத்தாம்!

செல்வம் வளர வளர, மனிதர்களுக்குப் பொறாமை வளர்ந்தது; பிறரை அடிமையாக்கி அவர்களது உழைப்பைக் கொண்டு உல்லாசமாக ஜீவிக்கும் எண்ணமும் வளர்ந்தது. மனிதர்களுக்குள்ளே சச்சர

வுகள் ஆரம்பமாயின். பார்த்துக்கொண்டே இருக்கையில், அவை மகாயுத்தங்களாக உருவெடுத்தன.

பூமியின்மீது ரத்த வெள்ளங்கள் ஓடின.

'மனிதனின் உடலிலிருந்து பாயும் இந்த ரத்தத்தினால் பூமியின் எரிச்சல் தணிந்தே தீரும்' என்று கடவுள் நினைத்தார்.

தாம் 'டூ' விட்டிருந்ததை மறந்து, அவர் பூமியிடம் சிரித்துக்கொண்டே, "மனிதனுடைய வேர்வை வெள்ளத்தினால் உன் தாபம் தணியவில்லை; ஆனால் இப்போது அவனுடைய இந்த ரத்தப் பிரவாகத்தினாலாவது அது தணிந்தது அல்லவா?" என்று கேட்டார்.

"இந்த ரத்தத்தினால் அந்த அக்கினி பின்னும் அதிகமாகிக் கொழுந்து விட்டு எரிகிறது" என்றது பூமி, விக்கி விக்கி அழுதுகொண்டே.

அதைக் கேட்டுப் பற்றிக்கொண்டு போயிற்று கடவுளுக்கு. "அப்படியானால் உன்னுடைய இந்த நெருப்பு எப்போதுமே அணையாது. ரத்தத்தைவிட அதிக மதிப்பு வாய்ந்த பொருள் மனிதனிடம் வேறு ஏதும் இல்லை!" என்று மிகவும் கோபத்தோடு சொல்லிவிட்டு, அவர் ஸ்வர்க்கத்திலே போய்த் தூங்கினார்.

* * *

பல காலம் கடந்தது.

ஒரு நாள் கடவுளுக்குத் தம் சயனகிருகத்தில் ஒரு பாட்டுக் கேட்டது. அது அவருக்குப் பழக்கமான குரல். பூமிதான் பாடிக்கொண்டிருந்தது; சந்தேகம் இல்லை.

அவருக்கு அது ஆச்சரியமாக இருந்தது. பூமி

மறுபடியும் ஏதாவது ஒரு காலத்தில் தம்மிடம் வந்தால், அதன் குரல் பெரிய அழுகுரலாகத்தான் இருக்கும் என்று அவர் நிச்சயமாக நம்பியிருந்தார்.

கடவுள் எழுந்து ஓடிவந்தார். ஸ்வர்க்கத்தின் எல்லையைத் தாண்டியவுடனே, அவர் காது கொடுத்துக் கேட்டார்.

எவ்வளவு அமைதியான, எவ்வளவு மதுரமான குரல்கள் அவை! துன்பப்படும் மனிதனின் கண்டத்திலிருந்து இப்படிப்பட்ட குரல்களா வரும்? சேச்சே! நெருப்பிலிருந்து எப்போதாவது பூக்கள் மலர்ந்தது உண்டா?

அந்த நிலையிலே கடவுள் ஒரு குழந்தையைப் போல ஆகிவிட்டார். மிகவும் ஆவலோடு ஓடிவந்து, "என்ன நடக்கிறது?" என்று பூமியைக் கேட்டார்.

"சிரிப்பு—பாட்டு!"

"பாட்டா? உள்ளத்திலே தீப்பிடித்து எரியும் போது உனக்கு எப்படிப் பாடத் தோன்றுகிறது?"

"அந்தத் தீ அணைந்துவிட்டதே!"

"அணைந்துவிட்டதா? அதை யார் அணைத்தது?"

"மனிதன்!"

"எதனாலே அணைத்தான்?"

"தன்னுடைய உள்மனத்திலே எழுந்த சகோதர பாவனையினால் அணைத்தான்! அந்தப் பாவனையின் காரணமாகத் தன் கண்களிலே துளும்பிய கண்ணீரினால் அணைத்தான்!"

## பருந்தும் மயிலும்

மேலே பருந்து சுழன்று சுழன்று வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

இழே மயில் ஆனந்தமாகத் தன்னைத் தானே வலம் வந்துகொண்டிருந்தது.

இரண்டுக்கும் பொழுது போகவில்லை.

"பருந்தக்கா, ஆகாய விமானம் ஏதுக்கு, நீ இருக்கும்போது?" என்றது மயில்.

"மயிலண்ணு, உன்னுடைய தோகைக்கு முன்பு ரத்தினங்களுக்கு மதிப்பு ஏது?" என்றது பருந்து.

*                *                *

அறிமுகம் நட்பாக மாறுவதற்கு நீண்ட காலம் பிடிக்கும் என்பதில்லை.

"ஆகாயத்து நக்ஷத்திரங்கள் எவ்வளவு அழகாக இருக்கின்றன!" என்று மயில் சொல்லும். "பூமியிலுள்ள புஷ்பங்களைப்போல!" என்று பருந்து பதில் சொல்லும்.

ஒரே தெய்விகத் தத்துவம் எங்கும் நிரம்பியிருக்கிறது என்ற சித்தாந்தம் இம்மாதிரியான சமயங்களில் அவற்றிற்குப் புலப்படும்.

பேசிக்கொண்டே இருக்கையில், "பூமியில் பாயும் நதிகள் எத்தனை அழகாக இருக்கின்றன!" என்று பருந்து கூறிவிடும்.

"ஆயினும் அவற்றின் நீர் ஆகாயத்திலிருந்து தானே வருகிறது?" என்று மயில் சமாதானம் சொல்லும்.

சராசர உலகில் எங்கும் ஒரே தத்துவம் நிறைந் திருக்கிறது என்ற பரந்த எண்ணம் அவ்வேளையில் அவற்றிற்குத் தோன்றும். ஒவ்வொரு பிராணியினிடத் தும் ஒரே தத்துவம் அபேதமாக விளையாடும்போது, ஒரு பிராணி மற்றொன்றைப் பிய்த்துத் தின்ன விரும்பு வதுகூட மகத்தான பாவம் அல்லவா? இந்தக் கொள்கை அவை இரண்டுக்கும் தாரகமே விளங் கியது.

பருந்து மயிலின் தோகைக்குள்ளே சுகமாகத் தூங்கும்.

மயில் பருந்தின் நகங்களோடு விஷமம் செய்து குதித்து விளையாடும்.

இரண்டுக்கும் பிராணசிநேகிதம் உண்டாகி விட்டது.

*　　　*　　　*

ஒரு நாள் பருந்தும் மயிலும், 'எங்கும் ஒரே பரமாத்மா நிறைந்திருக்கிறான்' என்ற தத்துவத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில், எதிரே ஒரு பாம்பு சலசலவென்று வளைந்து வளைந்து சென்றது.

பருந்து அதைப் பார்த்தது.

மயிலும் அதைப் பார்த்தது.

பருந்து சடக்கென்று பாய்ந்தது.

மயிலும் துள்ளிக் குதித்தது.

"என் உணவு இது" என்று பருந்து கத்தியது.

"என் உணவு இது" என்று மயில் அகவியது.

இரண்டும் உயிருக்கு மன்றாடிக்கொண்டு சண்டை போட்டுக்கொண்டிருக்க, பாம்பு எப் போதோ நழுவிவிட்டது.

காயமுற்ற பருந்தினல் ஆகாயத்தில் பறக்க முடியவில்லை.

காயமுற்ற மயிலால் இருந்த இடத்தை விட்டு அசைய முடியவில்லை.

முன்பு அவை ஒன்றை மற்றொன்று பார்க்கும் போது அவற்றின் கண்களில் மலர்கள் பூக்கும். இப்போது அதே கண்களில் எரிதழல்கள் சுடர் விட்டன.

இரண்டும் ஒரே சமயத்தில் உயிரைத் துறந்தன.

பயந்து ஓடிய பாம்பு சிறிது நேரத்துக்கெல்லாம் சத்தம் செய்யாமல் பதுங்கிக்கொண்டே திரும்பி வந்தது. பார்த்தால், பருந்து செயலற்றுக் கிடக்கிறது ; மயிலும் செயலற்றுக் கிடக்கிறது!

“ஒவ்வொரு பிராணியினிடத்தும் ஒரே தத்துவம் விளையாடுகிறது என்பது எவ்வளவு உண்மை!” என்று பாம்பு தனக்குள்ளேயே முணுமுணுத்தது.

# சித்திரகுப்தன் கச்சேரி

ஸூரியமண்டலத்தைத் தாண்டியாகிவிட்டது; ஆயினும் யமதூதர்களின் பாசங்களில் இருந்த அங்குஷ்டப் பிரமாணமுள்ள ஜீவன்கள் இன்னமும் பின்னால் திரும்பிப் பார்த்துக்கொண்டே இருந்தன. செம்படவன் தண்ணீரிலிருந்து இப்போதுதான் இழுத்துப்போட்ட மீன்களைப்போல, அந்த ஜீவன்கள் துடிதுடித்துக்கொண்டு இருந்தன.

எங்கிருந்தோ தெய்விகப் பாட்டின் இன்னிசை காற்றிலே மிதந்து வந்தது. பாசங்களில் இருந்த மனித ஜீவன்கள் ஆத்திரத்தோடு பூமி இருந்த திசையை நோக்கின. ஆனால், அந்த யமதூதர்கள் இருவரும், அந்தப் பாட்டிலே மோகித்துப்போய், ஸ்வர்க்கவழியைப் பார்க்கலானார்கள்.

துயரத்தோடு ஒரு பெருமூச்சு விட்டு ஒரு தூதன் மற்றவனிடம், "ரம்பை பாடுகிறாள் போலிருக்கிறது?" என்றான்.

"அது ரம்பையானாலும் சரி, ஊர்வசியானாலும் சரி. இந்தப் பாட்டைக் கேட்காமல் இனி நாம் நகரப்போவதில்லை" என்றான் மற்றவன்.

முதலில் பேசிய தூதன் பெருஞ் சிந்தையில் ஆழ்ந்தான். மண்ணுலகத்திலிருந்து யமதர்ம ராஜனுடைய நியாயாலயத்துக்குப் பிரயாணம் செய்ய எவ்வளவு நேரம் பிடிக்கும் என்பது சித்திரகுப்தனுக்குத் தெரியாமலா இருக்கும்? ஆனால் அவ்வினிய சங்கீதத்தைக் கேட்கும் ஆசையை அந்தத் தூதன்

எப்படி அடக்க முடியும்? மரணாவஸ்தையிலுள்ள நோயாளிகளின் விக்கல்களும், அவர்களுடைய சுற்றத்தாரின் பிலாக்கணமும், யமதர்மராஜனுடைய நியாயாலயத்தில் நரக தண்டனை விதித்தவுடனே மனித ஜீவன்கள் 'ஐயோ! ஐயோ!' என்று அலறுவதும், நரகத்தில் பயங்கரமான தண்டனைகளை அநுபவிக்கும் துரதிருஷ்ட ஜீவன்களின் கீச்சுக்குரல்களுமே அந்த யமதூதர்களின் வாழ்க்கையிலுள்ள சங்கீதம்! மண்ணுலகத்துப் போலீஸ்காரர்களுடைய யுக்திகள் எல்லாம் அவர்களுக்குப் பாவம், தெரியவே தெரியாது! பணம் கொடுக்காமலே நாடகசாலைகளில் நுழையும் வித்தை பூலோகத்து நியாயதேவதையின் தூதர்களுக்குத்தான் வரும். அது யமலோகத்து அப்பாவிகளின் வேலை அல்ல!

சூரிய கிரணங்கள் கண்ணுக்குத் தெரியாமலே பூமியிலுள்ள நீரை ஆகர்ஷிப்பதுபோல, அந்தத் தேவகானத்தின் அபூர்வ ராகங்கள் அந்த யமதூதர்களைத் தம்மிடம் பிடித்து இழுத்தன. கையில் இருந்த பாசங்களை வழியைத் தாண்டிச் சற்று அப்புறமாக வைத்துவிட்டு, அவ்விருவரும் பாட்டைக் கேட்கப் போய்விட்டனர்.

யமதூதர்கள் தொலைவில் போனதாகத் தெரிந்ததும், "இன்னமுங்கூட என்னை யாராவது விடுவித்துப் பூலோகத்திலே கொண்டுபோய்விட்டால்—" என்று தீனக்குரல் ஒன்று, ஒரு பாசத்திலிருந்து கிளம்பியது.

"நானும் குதித்துக்கொண்டு வருவேன், அண்ணா!" என்ற சொற்கள் மற்றொரு பாசத்திலிருந்து வெளிவந்தன. காரிருளில் அடர்ந்த கோரைப் புதரின் நடுவே மினுமினுக்கும் மின்மினிப் பூச்சிகளைப்

போலத் தோற்றின, பாசங்களில் இருந்த அவ்விரு ஜீவன்கள்.

"உங்கள் பெயர் என்ன?" என்று கேட்டது, முதலில் பேசிய ஜீவன்.

"பெயரா?" என்று மற்ருெரு ஜீவன் சிரித்துக் கொண்டே, "அது மட்டும் ஏனோ ஞாபகத்துக்கு வரவில்லை, அண்ணா!" என்று பதில் சொல்லியது.

"என் கதியும் அப்படித்தான் இருக்கிறது. நான் யார் என்பது எனக்கு ஞாபகமே இல்லை. என் உருவம் எப்படி இருந்தது என்பதும் நினைவு இல்லை. ஆனால், மற்ற விஷயங்கள் எல்லாம் எவ்வளவு நன்றாக நினைவிருக்கின்றன, தெரியுமோ! என் வீட்டு வாசலிலே இருந்த அந்த உயர்ந்த தென்னைமரம்—"

"தென்னைமரமா? தென்னங் கள்—அதை நினைத்தாலே வாயில் நீர் ஊறுகிறது, அண்ணா!"

"நான் ஒருபோதும் கள் குடித்ததில்லை. எது எப்படி இருந்தாலும், இந்தப் பரலோகத்திலே நீங்களும் நானும் ஒன்றுதான். எனக்குத் தென்னை மரத்தின் ஞாபகம் வருவதுபோலவே, உங்களுக்கும் அந்த ஞாபகம் வருகிறது. இருவருமே இங்கிருந்து நழுவிப் போக முடியுமானால்,—"

"அப்படி முடிந்தால் எவ்வளவு ஜோராக இருக்கும், அண்ணா! இன்னும் இரண்டொரு நாளில் எங்கள் ஊரில் ஒரு பெரிய கல்யாண விருந்து நடப்பதற்கு இருந்தது. அதற்குள்ளே தெய்வம் எனக்கு இந்தச் சங்கடத்தைக் கொண்டுவந்து விட்டதே!"

"எங்கள் ஊரிலும் இரண்டொரு நாளில் ஒரு பெரிய கல்யாண விருந்து நடப்பதற்கு இருக்கிறது. அடடா! என்ன ஒற்றுமை! அப்படியானால் நாம்

இருவரும் ஒரே ஊர்க்காரர்கள்தாம். இங்கே யமனுடைய கச்சேரியிலும் ஒருவரை விட்டு மற்றவர் பிரியக் கூடாது."

"நாம் இருவரும் துணையாக வந்தோம்; துணையாகவே இருப்போம். ஆனால் ஒரு விஷயம், அண்ணு: இங்கே மீன் சாம்பார் 'சமத்தியா'க் கிடைக்குமா?"

"இங்கே மோர் எப்படிக் கிடைக்கும் என்பது எனக்குப் பெரிய பிரச்னையாகிவிட்டது. ஆமாம் ஐயா, ஸ்வர்க்கம் கிடைத்துத்தான் என்ன பிரயோஜனம்? 'தக்ரம் சக்ரஸ்ய துர்லபம்' (மோர் இந்திரனுக்கும் கிடைப்பது அரிது) என்று சொல்வார்களே!"

"என்ன, என்ன? நீங்கள் இப்போது என்ன சொனனீர்கள, அண்ணு? நீங்கள் சொன்னது எனக்கு ஒன்றும் புரியவே இல்லையே."

"புரிந்துதான் இனிமேல் என்ன செய்வது? ஸ்வர்க்கத்தில் பாரிஜாத மலர்கள் இருக்கும்; ஆனால் சம்பங்கிப் பூக்கள் ஏது? என் வீட்டுக்காரிக்குத்தான் அவற்றில் என்ன ஆசை!"

"என் பெண்சாதிக்குக் காட்டுமல்லிகை என்றால் உசிர்! இனிமேல் அந்தப் பூவை இங்கே பார்க்கக்கூட முடியாது."

"ஸ்வர்க்கத்தில் கற்பகமரம் இருக்கிறது என்பார்கள். ஆனால் எங்கள் வீட்டுப் புறக்கடையிலுள்ள ஒட்டு மாம்பழத்தின் இனிமையே வேறுதான்!"

"என் குடிசை வாசலில் இருந்த அந்த அருமையான பலா மரம்—"

"அது போகட்டும். மழையின் வேடிக்கையை இங்கே எப்படிப் பார்க்க முடியும்? ஸ்வர்க்கத்தில் மழை பெய்வது ஏது? எங்கள் வீட்டு முற்றத்தில்

கூடல்வாய் வழியாக மழை நீர் கொட்டும்போது அஹஹா! வேதகோஷத்தைப்போல் இருக்குமே!"

"ஆகாயத்தில் இடி முழங்கும்போது பறை கொட்டும் சத்தம்போலக் கேட்கும்; அல்லவா?"

யமதூதர்கள் வரும் சத்தம் கேட்டது. "எல்லா விஷயங்களிலும் நாம் ஒரே அபிப்பிராயம் கொண்டிருக்கிறோம். நாம் இனிமேல் ஒருவரை மற்றவர் விடக்கூடாது. இது சத்தியம்" என்று இரண்டு பாசங்களிலிருந்தும் மெதுவாகக் குரல்கள் வந்தன.

அவர்களுடைய கடைசிச் சொல், திரும்பிவந்த யமதூதர்களின் காதில் விழுந்தது. பொங்கிவரும் சிரிப்பை அவர்களால் அடக்க முடியவில்லை. 'தேகத்திலிருந்து விடுபட்ட ஜீவன்கள் சத்தியம் செய்து கொள்வதில் அர்த்தம் என்ன?' என்று கேட்பது போல இருந்தது அந்தச் சிரிப்பு.

யமதூதர்கள் அவசர அவசரமாகப் பாசங்களைத் தூக்கிக்கொண்டு ஒரே ஓட்டமாக யமலோகத்துக்குப் புறப்பட்டார்கள். வைதரணி நதிக்கரைக்கு வந்து படகில் உட்கார்ந்ததும், அவர்கள் அவ்விரு பாசங்களையும் ஒன்றாகப் போட்டார்கள். "நம்மூர் ஆற்றங்கரையிலுள்ள படகின் துடுப்பு இதைவிடப் பெரிது; அல்லவா?" என்று ஒரு பாசத்திலிருந்து மெதுவாகப் பேச்சு வெளிவந்தது.

மற்றொரு பாசத்திலிருந்து, தெளிவற்ற சொற்களிலே, ஒரு பாட்டின் தொடர் வெளியாயிற்று:

"மண்ணை நம்பி—ஏலேலோ
மரம் இருக்க—ஐலஸா"

"சற்று உரக்கப் பாடுங்கள். எவ்வளவு இனிமையான பாட்டு!" என்றது முதற் பாசத்து ஜீவன்.

யமதூதர்களின் பயத்தினுல் மற்ெறாரு ஜீவன் அந்தப் பாட்டைப் பாடவே இல்லை. படகு கரை சேர்ந்ததுமே, யமதூதர்கள் மீண்டும் பாசங்களை எடுத்துக்கொண்டு ஓரே ஓட்டமாக ஓடி, சித்திரகுப்தனுடைய கச்சேரியில் போய் நின்றார்கள். சித்திர குப்தன், நெற்றியில் இருந்த மூக்குக் கண்ணுடியை மூக்கின்மேல் நகர்த்திக்கொண்டு, "எத்தனை ஜீவன்கள்?" என்று கேட்டான்.

"இரண்டு ஜீவன்கள்."

"எதனுல் சாவு?"

"திடீர் விபத்தினுல் மரணம்."

"இருவருக்குமா?"

"ஆமாம்; இருவரும் திடீர் விபத்தினுல்தான் இறந்தார்கள்."

பாசத்தில் இருந்த ஜீவன்கள் ஆவலோடு அதைக் கேட்கலாயின. பெயரையும் உருவத்தையும் போலவே தமது மரணத்தையும் அவை மறந்திருந்தன.

"என்ன துர்விபத்து நேர்ந்தது?" என்று சித்திர குப்தன் கேட்டான்.

முதல் யமதூதன் தன்னுடைய பாசத்தைக் காட்டி, "இவன் பிராம்மணன்!" என்றான்.

மற்றொருவன் தன் பாசத்தைத் தூக்கி, "இவன் தீண்டாதவன்!" என்றான்.

"ஒரே சமயத்தில் இவர்களுக்கு எப்படித் துர் விபத்து நேர்ந்தது? கள் குடித்துவிட்டுக் காரின் கீழே அகப்பட்டுக்கொண்டார்களா என்ன?" என்று சித்திரகுப்தன் ஆச்சரியத்தோடு கேட்டான்.

"காரினுல் நேர்ந்த துர்விபத்து அல்ல. ஒரு கோயி லிலே துர்விபத்து நேர்ந்தது!" என்றான் முதல் தூதன்.

"தீண்டாதவர்கள் தடியும் கையுமாகக் கோயிலுக்குள் பிரவேசிக்க முயன்றனர்; பிராம்மணர்கள் தடியும் கையுமாக அவர்களைத் தடுக்க முயன்றனர். அந்த அடிதடிச் சண்டையில் இவர்கள் இருவரும் ஒருவர் மண்டையை மற்றவர் உடைத்தார்கள்!" என்றான் மற்றொரு தூதன்.

"துரோகி!" என்ற ஒரே சொல் ஒரேயடியாக அவ்விரு பாசங்களிலிருந்தும் வெளிவந்தது.

## சீர்திருத்தவாதி

வாலறுந்த நரி பேசுகிறது :

"சகோதர சகோதரிகளே! முன்னால் செய்து விட்டு அப்புறம் பேசுவதே என் கொள்கை. வாலி னால்தான் மனிதனைவிடக் குள்ளநரிக்கு மதிப்புக் குறைந்துபோயிருக்கிறது. மனிதன் என்றால் என்ன? வால் இல்லாத குரங்கு! தவிரவும், இயற்கையிலே உண்டான ஒவ்வொரு பொருளும் பிராணிகளுக்குக் கட்டாயமாகப் பயன்படுகிறது என்று சொல்ல முடியாது. மனிதர்களுக்குள்ளே ஆணை எடுத்துக் கொள்ளுங்கள். அவன் முகத்தில் தாடியும் மீசையும் காடுகளைப்போல இராப்பகலாக வளர்ந்துகொண்டே இருக்கின்றன. ஆனால், அவன் அதைச் சுத்தமாக வெட்டி எறிந்து தன்னைச் சீர்திருத்திக்கொண்டிருக் கிறான். ஆகையால் நான் இன்று இந்த நரிக்கூட்டத் தினரை வணங்கிக் கேட்டுக்கொள்கிறேன் : நாம் எல்லோருமாகச் சேர்ந்து வாலறுக்கும் தினம் ஒன் றைக் கொண்டாடவேண்டும். அன்றைத்தினம் நம் மில் ஒவ்வொருவரும் வாலை அறுத்து எறியும்சீர்திருத் தத்தை அமலுக்குக் கொண்டுவர வேண்டும். சகோ தரர்களே, அன்பர்களே, புரட்சி உங்களைக் கூப்பிடு கிறது. எழுந்திருங்கள், விழித்துக்கொள்ளுங்கள்!"

எல்லா நரிகளும் தம்முடைய கிழத் தலைவரை உற்றுப் பார்த்தன. வாலறுந்த நரி சொல்லியது

முற்றும் உண்மையே என்று அவற்றிற்குத் தோன்றியது.

கிழ நரி எழுந்து நின்று, "இன்று ஒரு மகாவித்து வானுடைய அருமையான பிரசங்கத்தைக் கேட்கும் பாக்கியம் நமக்குக் கிடைத்தது. அவர் கூறிய விஷயங்களை நான் என் வால் பூர்வமாக ஆமோதிக்கிறேன்" என்று ஊளையிட்டுப் பேசியது.

"கேளுங்கள், கேளுங்கள்!" என்று இடையிலேயே கத்தியது வால் அறுபட்ட நரி.

கிழநரி தொடர்ந்து பேசியது: "வால் அறுந்து போனபின்பு மீண்டும் அது தேவையாக இருந்தால், மறுபடியும் வாலை முளைக்கச் செய்வதற்கும் இப்போது சௌகரியம் ஏற்பட்டிருக்கிறது. ஒரு விஞ்ஞான நிபுணர் சமீபத்திலேதான் அத்தகைய ஆராய்ச்சியைச் செய்து முடித்து,—"

"அந்த விஞ்ஞான நிபுணரின் பெயர் என்ன?" என்று வாலறுந்த நரி அவசர அவசரமாகக் கேட்டது.

கிழநரி அதன் பேச்சையே கவனிக்காததுபோல மேலே பேசத் தொடங்கியது.

அப்போது வாலறுந்த நரி திடீரென்று எழுந்து நின்று, "ஓய் கிழவரே, அந்த ஆராய்ச்சி செய்த விஞ்ஞான நிபுணரின் விலாசந்தான் இப்போது எனக்குத் தேவை" என்று கூவியது.

ஒரேயடியாக எங்கும் பயங்கரமான நரியூளை கிளம்பிவிட்டது. அதைக் கேட்டபின்புதான் வாலறுந்த நரிக்குத் தன் தவறு தெரிந்தது. ஆனால் இனி அதனால் என்ன பிரயோஜனம்? அது சொன்ன புரட்சிக்கு அர்த்தம் என்ன என்பதுதான் எல்லா நரிகளுக்கும் தெரிந்து போயிற்றே!

## மணக்கும் உள்ளம்

தன் உடல் மாசற்று இருப்பதில் அவனுக்குப் பெரிய பெருமை. எங்கேயாவது ஒரு துரும்பு முற்றத்தில் விழுந்தால், உடனே அவன் அதை அப்புறப்படுத்துவான். அண்டையிலுள்ள மரங்களின் இலைகள் முற்றத்தில் விழும்; ஆனால் அவ்வப்போது அவன் அந்த இலைகளை ஒவ்வொன்றாக எடுத்து வெளியே எறிவான்.

காலம் மாறியது. அதே முற்றம் வெறிச்சென்று இருந்தது. மாசற்ற முற்றத்தைக் கண்டும் அவனுக்கு மகிழ்ச்சி இல்லை!

அவனுடைய மனத்தில் அமைதி இல்லை. முற்றத்தின் ஒரு மூலையில் அவன் ஒரு மல்லிகைக் கொடி வைத்தான். 'அவ்வளவு மூலைதானே! போனால் போகிறது! பணக்காரன் அவ்வளவு பிச்சையாவது இடவேண்டாமா?' என்று தன் மனத்துக்குச் சமாதானம் சொன்னான்.

மல்லிகைக் கொடியில் மொட்டுகள் தோன்றின. அவன் அவற்றைத் தூரத்திலிருந்தே பார்ப்பான். மல்லிகை மலர்ந்தது. இப்போது அவனால் தூரத்தில் இருக்க முடியவில்லை. அருகில் சென்று அழகிய இனிய மலர்களைக் கையில் எடுத்துக்கொண்டான். தன்னையும் அறியாமலே அவன் முற்றத்தைப் புறக்கணித்தான்.

நறுமணங் கமழ்ந்த அவன் உள்ளத்தில், அண்டையிலுள்ள மரங்களிலிருந்து முற்றத்தில் விழும் இலைகளின் சத்தம் படவே இல்லை.

# பிரயாணி

ஒரு பாறைமீது அவன் உடலைச் சுருட்டிக்கொண்டு படுத்துத் தூங்கிவிட்டான்.

எத்தனையோ காலமாக யாத்திரை செய்துவரும் பிரயாணி அவன்.

குளிர்ந்த வைகறைக் காற்றுப் பட்டு உடல் சிலிர்த்தவுடனே அவன் எழுந்தான். இரவு முழுவதும் நடக்கவேண்டும் என்று முடிவு கட்டியிருந்தும் நடுவே தனக்கு எப்படித் தூக்கம் வந்துவிட்டது என்பது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவன் திடுக்கென்று எழுந்தான்; பிறகு—

மெதுவாக நடந்து சென்றான். பேசச் சக்தி இல்லாத அவன் கால்கள் இரண்டும், ரத்தம் கறுத்துப் போய், ஒரே ரத்தக்களரியாக இருந்தன. நடக்கும் போது கற்கள் படுவதால அவனுடைய காலின் ஒவ்வோர் அணுவிலும் சகிக்க முடியாத வேதனை உண்டாகி, அவன் துடியாகத் துடித்தான்.

அலுப்படைந்து அவன் ஒரு பாறைமேல் உட்கார்ந்தான். தற்செயலாகப் பின்னல் திரும்பிப் பார்த்தான்: அந்தக் காட்சி எவ்வளவு அழகாக இருந்தது! பனிமூட்டத்திலே தென்பட்ட மரங்களின் அந்த உச்சாணிக்கிளைகள், தாயின் முன்றானைக்குள்ளே மறைந்துகொண்டு தலையை மட்டும் நீட்டிப் பார்க்கும் சிறுகுழந்தைகளைப்போலத் தோற்றின.

அவன் எதிரே பார்த்தான்: பனி மூட்டத்தைத்

தவிர வேறு ஒன்றுமே தென்படவில்லை. முன்பின் தெரியாத பயங்கரமான கடல் தன் முன்னால் விரிந்து கிடப்பதாகக் கற்பனை செய்துகொண்டு அவன் பயந்துபோனான்.

வந்த வழியே திரும்பிப் போய்விடலாம் என்று எண்ணி, அவன் முகத்தைக்கூடத் திருப்பிக்கொண்டான்.

அதற்குள் திடீரென்று வெயில் வீசியது. பனி மூட்டம் பரபரவென்று கலைய ஆரம்பித்தது. தன் தலையிலே கட்டியிருக்கும் காயக்கட்டை யாரோ அவிழ்ப்பதுபோல அவனுக்குத் தோற்றியது.

தான் நடந்து வந்த வழியை அவன் பார்த்தான். சற்று நேரம் முன்பு அவன் எந்த மரங்களின் உச்சாணிக்கிளைகளைப் பார்த்தானோ, அவை ஒரு பயங்கரமான காட்டில் வளர்ந்த மரங்கள். அவன் காலை ரத்தக்களரியாக்கிய முட்கள் அந்தக் காட்டிலே தான் அவனைக் குத்தின. அந்தப் பிரயாணத்தை நினைத்தவுடனே அவனுக்கு மெய் சிலிர்த்தது.

அவன் தன் கால்களின் கீழே சுற்று முற்றும் பார்த்தான். பருக்கைக் கல், பெரிய கற்கள், பாறைகள் ஆகியவை இருந்தன. ஆனால் எங்கும் முள் இல்லை. சுற்றுப்புறத்து இயற்கையைப்போலவே அவன் பார்வையிலும் ஒளி வீசியது.

அவன் மறுபடி எதிரே பார்த்தான். சற்று நேரம் முன்பு பனி மூட்டத்தில் மறைந்திருந்த பகுதிகள் யாவும் இப்போது தெளிவாகத் தென்பட்டன. அழகிய பூஞ்சோலை; அதனுள்ளே, திவலைகளை மேலே தூக்கி எறிந்து சொரியும் நீரூற்று; அந்த நீரூற்றை ஆசீர்வதிக்கும் கோயிலின் பொற்கலசம்; சோலையிலே

குதித்து விளையாடும் குழந்தைகளின் மங்கலான தோற்றம்—

அவன் அந்தத் திசையை நோக்கி ஓட்டமாக ஓடினன். அவன் கண்களிலே மிதக்கும் ஆனந்தத்தைப் பார்த்தால், அவன் கால்கள் சல்லடையாகிவிட்டிருக்கின்றன என்பதை யாரும் உண்மை என்றே நினைக்க மாட்டார்கள் !

# தெய்வ பிம்பம்

அரசன் புதிய கோயில் ஒன்றைக் கட்டினான்.

அந்தக் கோயிலில் சலவைக் கல்லால் ஆகிய அழகிய தெய்வ பிம்பம் விளங்கியது.

பிம்பத்தின் அருகிலேயே பளபளக்கும் நந்தா விளக்கை வைத்திருந்தார்கள். யார் வேண்டுமானாலும் எப்பொழுதும் தூரத்திலிருந்தே தேவதரிசனம் செய்யும்படியாக அவ்வளவு பளிச்சென்று இருந்தது, விளக்கின் பிரகாசம்.

பொற் குத்துவிளக்கில் அந்த வாடாவிளக்கு எரிந்துகொண்டிருந்தது. அது திருட்டுப் போகலாகாது என்று, கர்ப்பக்கிருகத்தின் வாசலில் காவல் போட்டார்கள்.

விளக்கிலே திரி சமைப்பதற்காக, வெள்ளை வெளேரென்ற நிர்மலமான பஞ்சில் பல மாதிரிகளை வரவழைத்து அவற்றிலிருந்து மிகவும் உயர்ந்ததைத் தேர்ந்தெடுத்தார்கள்.

நந்தாவிளக்கில் ஊற்றிய எண்ணெயோ, கங்கை நீரையும் தோற்கடிக்கும்படி அத்தனை தெளிவாக இருந்தது.

எந்த நேரத்தில் வேண்டுமாயினும் அரசன் தேவதரிசனத்துக்கு வந்து போவான்.

* * *

ஒரு நாள் அரசன் தற்செயலாக நந்தாவிளக்கை ஒரு தடவை உற்றுப் பார்த்தான்.

பொற் குத்துவிளக்கு பளபளவென்று மின்னியது. வெண்மையான ஐந்து சுடர்கள் கூத்தாடிக்கொண்டிருந்தன. ஆனால்—

ஒரு சுடரின் அருகில் ஏதோ ஒரு சிறுகுச்சி விழுந்து கிடந்தது.

'தரித்திரம் பிடித்த அந்தப் பூசாரிக்கு அடியோடு ஸௌந்தரியப் பார்வையே இல்லையே! அழகு நடமாடும் இந்த இடத்திலே இந்த விகாரமான குச்சி ஏதுக்கு? பல்லைக் குத்த ஏதாவது ஒரு சிறுகுச்சியைக் கொண்டுவந்திருப்பான்; அதைக் குத்துவிளக்கிலே வைத்துவிட்டான். ஸர்வமுட்டாள்!' என்று நினைத்தான் அரசன்.

அவன் அதை எடுத்து வெளியே எறிந்தான். அரண்மனைக்குத் திரும்பிப் போகும்போது, "கோயிலிலுள்ள அழகிய நந்தாவிளக்கில் ஒரு சிறு துரும்பு கூட இருக்கக்கூடாது. அங்கே மறுபடியும் ஏதாவது குச்சி தென்பட்டால், பூசாரியைத் தூக்குமரத்தில் தொங்கவிட வேண்டியதுதான்" என்று பூசாரிக்குச் செய்தி சொல்லி அனுப்பினான்.

* * *

சிறிது நேரத்துக்கெல்லாம் பூசாரி ஓட்டமாக ஓடிவந்தான். ஆனால் அப்போது மகாராஜா போஜனம் செய்துகொண்டிருந்தார்.

இரண்டு மணிநேரம் கழித்து அவன் மறுபடி ஓடிவந்தான். ஆனால் அப்போது மகாராஜா சுகசயனத்திலே இருந்தார்.

இரண்டு மணிக்கெல்லாம் அவன் மறுபடி வந்தான். இப்போது அவன் முகம் சோர்ந்துபோயிருந்

தது. "எப்படியாவது மகாராஜாவை நான் பார்த்துப் பேச ஏற்பாடு செய்யுங்கள்" என்று அவன் அரண்மனை அதிகாரிகளின் காலைப் பிடித்தான். "அது சாத்தியமல்ல. மகாராஜா சற்று நேரம் முந்திதான் வலது புறத்திலிருந்து இடது புறமாகத் திரும்பிப் படுத்திருக்கிறார்" என்று அவர்கள் பதில் சொன்னார்கள்.

பூசாரி பாவம், என்ன செய்ய முடியும்! இரண்டு மணி நேரம் கழித்து ஓடிவந்தான். இந்தத் தடவை அவன் உடல் முழுவதும் நடுங்கிக்கொண்டிருந்தது. "மகாராஜா, மகாராஜா!" என்று அவன் உரக்கக் கூவினான்.

ஆனால் மகாராஜா ஒரு புது நாட்டியக்காரியின் நர்த்தனத்தைப் பார்ப்பதிலே மூழ்கியிருந்தார்!

* * *

நாட்டியம் முடிந்ததும் அரசன் தேவதரிசனம் செய்யப் போனான்.

கர்ப்பக்கிருகத்தின் வாசலில் பார்க்கும்போது உள்ளே அமாவாசைக் கருக்கல் பரவியிருந்தது.

பூசாரியின்மீது அவனுக்கு அசாத்தியமான கோபம் வந்தது. சலவைக்கல் பிம்பம், பொற் குத்து விளக்கு முதலிய யாவும் இருட்டிலே மூழ்கிக் கிடந்தன.

பூசாரியைத் தூக்கிலிட அவன் ஆக்கினை செய்வதாக இருந்தான்; அதற்குள் அந்த இருட்டிலிருந்து, கம்பீரமான குரல் ஒன்று, "அரசே, உண்மையான குற்றவாளி நீதான்; பூசாரி அல்ல" என்றது.

'தெய்வ பிம்பமா பேசுகிறது!' என்று திகைத்

தான் அரசன். அவன் பயந்துபோய்க் காது கொடுத்துக் கேட்டான்.

"அரசே, நந்தாவிளக்கில் ஒரு சிறு குச்சி இருப்பதைக் கண்டு, கோயிலின் அழகுக்குக் குறை வந்துவிட்டது என்று நீ நினைத்தாய். விளக்கிலே ஒரு சிறு துரும்புகூட இருக்கக்கூடாது என்று பூசாரிக்கு உத்தரவு போட்டாய். ஆனால், இந்தக் கோயில், என்னுடைய பிம்பம், இந்தப் பொற் குத்துவிளக்கு ஆகிய எல்லாவற்றின் அழகும் அந்த ஒரு சிறு குச்சியைப் பொறுத்ததே என்று உனக்குத் தெரியவில்லை!"

அரசன் மனத்தில் இருந்த பயம் இப்போது ஆச்சரியமாக மாறியது. அவன் காதைத் தீட்டிவைத்துக்கொண்டு கேட்கலானான். "பொற்குத்துவிளக்கிலே எரியும் ஜோதிக்குக்கூடச் சுடர் தட்டும்; கருமை ஏறும். அதைத் தூண்டி எரியச் செய்யும் சிறு குச்சியை நீ முட்டாள்தனமாகக் கோயிலுக்கு வெளியே எறிந்துவிட்டாய். இங்கே வீற்றிருக்கும் உண்மையான தெய்வம் என் பிம்பம் அல்ல; இந்தப் பொற் குத்துவிளக்கு அல்ல; சாதாரணமான அந்தச் சிறு குச்சிதான்!"

வெளியே எறிந்துவிட்ட அந்தச் சிறு குச்சியை அரசன் மரியாதையாகக் கோயிலுக்குள் கொண்டு வந்து, அதனால் விளக்கைத் தூண்டினான்.

பொற் குத்துவிளக்கு மீண்டும் பிரகாசமாக எரிய ஆரம்பித்தது.

தெய்வ பிம்பம் புன்னகை புரிந்தது.

O

# வீட்டு வைத்தியர்

டாக்டர் தி. சே. சௌ. ராஜன்

எழுதியது

இந்தப் பெரிய புத்தகத்தில் டாக்டர் ராஜன் மனித உடற் கூறுகளைப் பற்றியும் பற்பல வியாதிகளைப்பற்றியும் விரிவாக எழுதியிருக்கிறார். அகஸ்மாத்தாக நேரும் விபத்துக்களைப் பற்றியும் உடனுதவியைப்பற்றியும் ஒரு தனி அத்தியாயம் உள்ளது. சாதாரண நோய்களுக்கு டாக்டரின் உதவி இல்லாமல் சிகிச்சை செய்துகொள்ளவும், தீவிரமான நோய்களில் டாக்டருக்குத் தேவையான விவரங்களைத் தெரிவிக்கும் அறிவைச் சம்பாதித்துக்கொள்ளவும் இந்த நூல் மிகவும் உதவும். நிறையப் படங்கள் இருக்கின்றன. இது ஒவ்வொரு வீட்டுக்கும் இன்றியமையாத புஸ்தகம்.

**விலை ரூ. 7/-**

மானேஜர்—கலைமகள் காரியாலயம்—மயிலாப்பூர்